உ

ஓம்

பரப்பிரஹ்மமணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 17 } பிரஜோற்பத்திஸு மார்கழிமீ கஉ { பகுதி 6
1931ஸு டிசம்பர்மீ 16உ

## கடவுள் வணக்கம்.

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுதலான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானி வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியர்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே. (1)

வைத்திடுங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக்கொண்டு
தியக்கமற இன்பசுகம் சேர்வதென்றோ ? (2)

வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்துபொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ? (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் அல்லல் எல்லாம் வீழ, மௌன மந்த்ராதிக்ய வித்தையை அருளவேண்டும் என்கிறார்.

(இ-ள்) நாதரூபமாகிய மஹாமந்திர வடிவ மானவனே! நாதாந்தமாகிய வெறுவெளியே! நற்சமயம் செழிக்க வருகின்ற மேகமே! ஞானனந்தங்களை யுடைய மயிலே! குதர்க்கம் செய்கின்ற மற்றச் சமயங்கள் எல்லாவற்றிற்கும் அறிதல் அருமையாகிய மேன்மைபெற்ற பெரிய வஸ்துவே! மலையரையனுக்கு இரு கண்மணிபோன்று அவதரித்தருளிய மலைவளர் காதலிப் பெணுமையே! (அடியேனது விண்ணப்பங் கேட்டருளல் வேண்டும்) பூதங்களுடன் பழகி வளர்கின்ற இந்திரியங்களாகிய பேய்களும், புத்தி முதலாகிய பேய்களும், போர்புரியும்படியான கோபம் முதலிய ராக்ஷசப் பேய்களும் எனது அறிவை உள்ளழித்து, துன்பம் வளர்த்திட, நான்மறைப் பிரமன் வகுத்தான். இத் துன்பங்க ளெல்லாம் கெடும்படி உன்னுடைய மௌன மந்திரமாகிய மேன்மை யான வித்தையை மனமகிழ்ந்து அருளிச் செய்வாயோ? என்க.

பேய்க் கோட்பட்டா னொருவன் அப்பேயின் வயப்பட்டு, அப் பேயின் செயல் அனைத்தும் தனது செயலாய்த் தனக்கென ஒரு சுதந்தரமுமின்றி வாழுதல் போல—தத்துவத்துட் கட்டுப்பட்ட ஆன்மாவானது, தத்துவத்தின் வயப்பட்டு, அத் தத்துவத்தின் செயலனைத்தும் தன்னுடைய செயலாய்த் தனக்கென ஒரு செயலின்றி வாழுதல் அநுபவமா யிருத்தலின், அத் தத்துவத் தின் கூறுகிய இந்திரியங்களையும், புந்தி முதலானவற்றையும், கோபாதிகளை யும் பேய்கள் என்றனர். இப்பேய்களின் தொல்லைக்குக் காரணம் பிறப்பு. அப் பிறப்புக்குக் காரணன் பிரமனுதலால் "சதுர்வேத வஞ்சன் விதித்தான்" என்றனர்.

2. இதனுல் திருவடித் தாமரைகளை ஆலிங்கனம் செய்து பேரின்பம் அடைவது எந்நாள் என்று வினவுகிறார்.

(இ-ள்) அடியேனது சிரத்தின்மீது வைத்தருளும் திருவடிகளைப் பிடித் துக் கண்ணிலும் மார்பிலும் தழுவிக்கொண்டு, கரங்களால் வளைத்துக்கட்டி, நெஞ்சினில் பொருந்த இருத்திப் பற்றிக்கொண்டு, மயக்கமில்லாமல் பேரின்ப சுகத்தை அடைவது எக்காலமோ? என்க.

3. அஞ்ஞானத்தால் வெந்து மோகத்தால் வெடிக்கின்ற என் மன வெம்மை நீங்கக் குளிர்ச்சி பொருந்திய திருவருவனே சொரூபமாகப் பெய் கின்ற கிருபை மழை தரிசிப்ப தெந்நாளோ? என்க.




## தேவதைகட்கு உயிர்ப்பலி.

உங்கள் மக்களும் நீங்களும் நோய்கொள
எங்கள் மக்களும் நாங்களும் என் செய்தோம்?
பொங்க விட்டுப் பலியும் கொடுக்குறீர்!
எங்கள் முறையினை ஈசனார் கேளாரோ?



அஹிம்ஸையைப் பரம தருமமாகப் போற்றும் நமது புண்ணிய பூமியில் இன்னும் தேவதைகட்கு உயிர்ப்பலி கொடுக்கும் அநாகரிக மூட வழக்கம் நிலைத்திருப்பது கொடுமையினும் கொடுமையாகும். தேவதைகள் உயிர்ப்பலி வேண்டுவதாக நம்புவது மக்களின் அறியாமையையே காட்டும். உயிர்ப் பலி வழக்கம் மக்கள் சமூகத்தில் பன்னெடுங் காலமாக இருந்து வருகிறது. நமது நாட்டில் ஆரியரும் தமிழரும் தெய்வங்களின் பேராலும் சாஸ்திரங்களின் பேராலும் உயிர்ப்பலியை உவந்து செய்து உண்டு மகிழ்கின்றனர். கடவுள் வாக்கு என்று சிறப்பிக்கப்படும் வேதங்களே யாகங்களின் பேரால் உயிர்ப்பலியை அநுமதிக்கின்றன. பண்டைத் தமிழ் நூல்களை ஆராய்வோர் தமிழ் மக்களிடையே உயிர்ப் பலி வழக்கம் சகஜம என்பதை நன்குணர்வா. இப்பொழுது சுத்த சைவக் கடவுளாக விளங்கும் திருமுருகன் முற்காலத்தில் ஆடு மாடு கோழிகளைப் பலியேற்கும் குறிஞ்சியங் கடவுளாக விளங்கிய உண்மையைத் தெய்வ மணங்கமழும் திருமுருகாற்றுப் படையில் தெளிவாகக் காணலாம். இன்றும், அறுத்துச் சமைத்த கோழியும் மீனும், முருகன் திருமுன், உயிர்பெற்றெழுவதாக வழங்கும் கதையும் கேட்கிறோம். மேற்கூறிய விவரங்களால் உயிர்ப்பலி நம்பிக்கையின் தொன்மையும் வன்மையும் ஒருவாறு விளங்கும் என்று நம்புகின்றோம்.

நமது நாட்டில் ஒரு காலத்தில் பௌத்த சமயமும் சமண சமயமும் தழைத்தோங்கி ஆதிக்கம் பெற்றிருந்தன. இவ்விரு சமயங்கட்கும் அருளொழுக்கத்திற்காதாரமான ஜீவகாருண்யத் தத்துவமே தலைசிறந்த அடிப்படை. இப்பொழுது இச்சமயங்கட்கு இந்நாட்டில் செல்வாக்கில்லை. இவற்றை அவலம்பிக்கும் மக்கள் தொகையும் மிக மிகக் குறைவே. புத்தர் பெருமான் யாகம் முதலிய உயிர்ப்பலிகளை நீக்கி மக்கள் உள்ளங்களில் அருளொழுக்க உணர்ச்சி வீறுகொண்டு விளங்கச் செய்யவே அவதரித்தருளினர். ஆனால் அவர் எதிர்பார்த்த பயன் எய்தவில்லை என்றே கூறவேண்டும். பௌத்த தருமத்திற்கு எதிர்ப்பு மிகுதியாக இருந்தது. இறுதியில் மறுதலையான சக்தியே மிஞ்சி வேரூன்றிவிட்டது. மற்றெல்லாப் பகுதிகளையும்விடத் தமிழகத்தில் பௌததக் கோட்பாடுகள் பெரிதும் செல்வாக்கற்றுப்போயின.

எந்த உண்மைச் சமயமும் உயிர்வதையாகிய பலியை விரும்பவில்லை என்பது தேற்றம். ஏதாவது ஒரு சமயமோ சாஸ்திரமோ உயிர்ப்பலியை விரும்பி விதிப்பதாகக் கூறப்படின், அவை போலிச் சமயம் போலிச் சாஸ்திரம் என்றே ஒதுக்கித் தள்ளவேண்டும். மக்களின் இரக்கமற்ற சுயநலமே அப்போலிச் சமய சாஸ்திரங்கட்கு ஆதாரம் என்பதைத் தவிர உண்மை ஒரு சிறிதும் இருக்க முடியாது என்பதே அறிஞர் ஆராய்ந்து துணிந்த முடிவு.

திருக்குறள் முதலிய ஒழுக்க நூல்களெல்லாம் உயிர்வதையை அறவே வெறுக்கின்றன. சைவ—வைணவ—அத்துவைத சமயங்களும் உயிர்வதையையும் புலாலுண்ணலையும் வெறுக்கின்றன. ஆனால் அவ்வொழுக்க நூல்களையும் சமயங்களையும் உயிராகப் போற்றும் மக்கள் உயிர்ப்பலியாகிய உயிர்வதை செய்துண்ணல் தருமமா என்று கேட்கின்றோம்? மக்கள் மாக்களாய்—காட்டு மிராண்டிகளாய்—அச்சமும் அறியாமையும் மேற்கொண்டு "துஷ்ட தேவதை"களின் "கிருபாகடாக்ஷம்" பெறும் பொருட்டுச் செய்து வந்த உயிர்ப்பலிகளை நாகரிகமும் பகுத்தறிவும் முதிர்ச்சி பெற்றுள்ள இக்காலத்திலும் செய்யத் துணிவது நகைப்பிற்கிடமானதாகும். உலகம் இன்பமும் துன்பமும் கலந்தது. உயிர்களின் வாழ்க்கையில் இன்ப துன்பம் மாறி மாறி வருதல் இயற்கை. இம்முறையில் மக்கட்கு நோய் முதலிய துன்பங்கள் நேர்ந்தால் அவற்றின் காரணங் கண்டு அறிவு முயற்சிகளால் அகற்ற முற்படவேண்டும். நமது நாட்டில் பண்டிதர்—பாமரர் எல்லாரும் இவ்வுண்மைகளை மறந்துவிடுகின்றனர். எடுத்ததற்கெல்லாம் "சாமி"களை நேர்ந்து கொள்ளுவதும் "நேர்ச்சிக் கடன்" செலுத்த முந்துவதுமே இவர்களின் தொழிலாகிவிட்டது. "சாமி"களை வேண்டிக் கொள்ளுவோர் எல்லாப் பளுவையும் "சாமி" தலையில் போட்டுவிடும் அளவிலேனும் நிற்கின்றனரோ? அதுவும் இல்லை. "சாமி" யை நம்பாமல் வேறு பரிகாரங்களைத் தேடவும் ஆத்திரப்படுகின்றனர்!

மருந்தினாலேனும் இயற்கையாலேனும் நோய்கள் நீங்கிவிட்டால் மக்கள் முன்னர் நேர்ந்துகொண்ட தேவதைகட்கு ஆடு கோழிகளைப் பலிகொடுக்கத் துணிந்துவிடுகின்றனர். "சாமி"களிடம் தங்கள் குறைகளை முறையிட்டு நேர்ந்து கொண்டும் ஏமாற்ற மடைகிறவர் பல்லாயிரவர் என்பதையும் இச்சந்தர்ப்பத்தில் ஞாபகமூட்ட விரும்புகின்றோம்? ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும் "ஊர்த் தேவதை"கள் கோவில்கொண்டிருக்கின்றன. ஆண்டுதோறும் பெரும்பாலும் அத் "தேவதை"கட்கு விழாவெடுத்தல் சகஜம். இவ் விழாக்களில் பொங்கலும் பலியும் முதன்மை பெற்று நிற்கும். "தேவதை"கட்குத் திருவிழா என்றால் அவ்வூர் ஆடு கோழிகட்கெல்லாம் ஆபத்து என்பதே பொருள். சிலவிடங்களில் எருமைகளும் பன்றிகளும் பலி கொடுக்கப்படுகின்றன. பலிக் கொடுமையைப்பற்றிச் சென்னை ஜீவஹிம்சை நிவாரணசங்கத் தலைவர் ஜஸ்டிஸ் ஸி. எச். பி. ஜாக்ஸன் அவர்கள் சமீபத்தில் பத்திரிகைகட்கு ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கிறார். அவ்வேண்டுகோளில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:—

"பலி கொடுக்கப்படும் ஆடு, பன்றி, எருமை, கோழி முதலியவை படும் கஷ்டம் பலருக்குத் தெரியாதிருக்கும். ஆடுகளின் கால்களும் காதுகளும் முதலில் துண்டிக்கப்பட்டுப் பிறகு கொல்லப்படுகின்றன. சில சமயங்களில் ஆடுகளின் சரீரம் 32 இடங்களில் வெட்டப்பட்டு மாம்சம் துண்டு துண்டாக எடுக்கப்படுகின்றது. பொது ஜனங்கள் பார்க்காமல் இருப்பதற்காக இது இராக்காலத்தில் நடத்தப்படுகிறது. கர்ப்பமான ஆடுகளும் பலி கொடுக்கப்படுகின்றன. வயிற்றிலிருந்து குட்டி கையால் பிடுங்கி எடுக்கப்பட்டு முதலில் கொல்லப்பட்டபின் தாய் கொல்லப்படுகிறது. உயிருள்ள பன்றிகள் தரையில் புதைக்கப்பட்ட ஈட்டிகளின்மீது உயரத்திலிருந்து போடப்படுகின்றன. அவை இறக்குமுன் பல மணி நேரம் அப்படியே இருந்து மிகவும் கஷ்டப்படுகின்றன. எருமைகள் தனியாகத் தோண்டப்பட்ட குழிகளுள் ஓட்டப்பட்டுப் பல பக்கங்களிலும் பலர் நின்றுகொண்டு கூர்மையான கத்திகளால் குத்தப்பட்ட பிறகு தலைகள் வெட்டப்படுகின்றன. கோழிகள் பலி கொடுக்கப்படும்போது மேலேயும் கீழேயும் தூக்கி எறிந்து ஆட்டப்படுகின்றன. அவை உயிருடன் இருக்கும்போதே கடிக்கப்பட்டு உதிரம் உறிஞ்சப்படுகிறது."

ஜஸ்டிஸ் ஸி. எச். பி. ஜாக்ஸன் அவர்கள் எடுத்துக் காட்டியிருக்கும் பலிச் சித்திரவதைக் கொடுமைகள் முற்றிலும் உண்மை என்றே நாம் நம்புகின்றோம். உயிர்களைச் சித்திரவதை செய்யக்கூடாது என்பதே ஜஸ்டிஸ் ஜாக்ஸன் வேண்டுகோளின் கருத்து. பலி கொடுப்பதையே முற்றிலும் நிறுத்த வேண்டும் என்று அவர் கூறத் துணியவில்லை. மத சம்பந்தம், நீண்ட கால வழக்கம், படித்தவரின் ஆக்ஷேபணை முதலியன பலி நீக்கத்திற்குத் தடையாக நிற்கும் என்று அவர்

அஞ்சுகின்றார். பகிரங்கமாக இவ்வாறு உயிர்களைச் சித்திரவதை செய்வதைத் தடுக்கத்தக்க முயற்சிகளை மேற்கொள்ளுமாறு மாத்திரம் நகர சபைகளை வேண்டிக் கொள்ளுகிறார். இத்தகைய பொருளற்ற மூட நம்பிக்கைச் சித்திரவதைகள் அடியோடு நாட்டைவிட்டு ஒழிய வேண்டும் என்பதே எமது பிரார்த்தனை—வேண்டுகோள்.

புலால் உணவை மேற்கொள்ளாத "உயர் வருண" மக்களும் நேர்ச்சிக் கடன் தீர்க்கப் பலி கொடுத்துப் பிறருக்கு அந்த மாமிசத்தைத் தானம்செய்து விடுகின்றனர். கோவை ஜில்லாவிலுள்ள நாட்டுராயன் கோவிலில் வாரந்தோறும் வெட்டப்படும் ஆடுகட்கு எல்லை இல்லை. விசேஷ காலங்களில் பலலாயிரக்கணக்கான ஆடுகள் பலி கொடுக்கப்படுகின்றன. அவ்விடம் முழுதும் உதிரக்காடாகவே இருக்கும். "அன்று பிறந்த குட்டியும் அழுக்குப்படாத வெண்ணெயும்" அங்குள்ள "சாமிக்"கு அதிகப் பிரியமாம். இதுபோலவே மதுரை, ராமநாதபுரம், திருநெலவேலி முதலிய ஜில்லாக்களில் உயிர்ப்பலிக் கொடுமைகள் மலிந்து கிடக்கின்றன. ஆங்காங்குள்ள சைவ நன்மக்களும் பிற அருளாளரும் ஏன் இக்கொடுமைகளை நீக்கத் தகுந்த பிரசாரம் மேற்கொள்ளக்கூடாது என்று கேட்கின்றோம்?

புலால் உணவு மக்கட்குரிய இயற்கை உணவு அன்று. மரக்கறி முதலிய சாக பக்ஷணங்களே மக்கட்குச் சிறந்த உணவாகும். புலால் உண்ணலால் விளையும் தீமைகளையும், மரக்கறி உணவால் விளையும் நன்மைகளையும் மேனாட்டு மருத்துவ நிபுணரே ஆராய்ந்து நன்கு விளக்கியிருக்கின்றனர். எனினும் உலகத்துப் பெரும்பான்மையான மக்கள் மாமிச பக்ஷணிகளாகவே இருக்கின்றனர். பகுத்தறிவற்ற விலங்கினங்களில் ஒருசில ஒன்றையொன்று கொன்று தின்கின்றன. பறப்பன ஊர்வனவற்றிலும் மாமிச பக்ஷணிகள் உண்டு. சிருஷ்டியின் அமைப்பே அவ்வாறு அமைந்திருக்கிறது. ஆனால் மக்கள் அவ்வியற்கையினின்றும் மாறுபட்டவர்கள். அவர்கட்குப் பகுத்தறிவு உண்டு. நன்மை தீமை உணர்ச்சி உண்டு. அன்பும் அருளும் உண்டு. மனச்சான்று உண்டு. இத்தகைய சிறந்த குணங்களாலேயே மக்கட் பிறப்பு மாண்புடையதாக மதிக்கப்படுகின்றது. பகுத்தறிவற்ற விலங்குகளைப்போல் பெரும்பான்மையான மக்கள் இன்னும் மாமிச உணவை மேற்கொண்டிருக்கின்றனர். இது இயற்கைக்கும் மனிதத் தன்மைக்கும் மீறிய வழக்கமாகும். கால தேச வர்த்தமானங்களை ஒட்டிச் சில நாடுகளில் மாமிசம் மத அநுமதிபெற்ற உணவாகவும் இன்றியமையாத உணவாகவும் விளங்குகின்றது. எவ்வாறாயினும் தீமை தீமையே. "கொல்லா விரதம் குவலயமெல்லாமோங்க, எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை பராபரமே" என்ற தாயுமான அடிகளின் அருண்மொழியை யாம் உலகத்திற்குச் சமர்ப்பணம் செய்வதைத் தவிர உலக மக்களெல்லாரையும் சீர்திருத்த வேறு நெறி அறியோம்.

மக்கள் ஆதியில் எதைச் சிறந்த உணவாகக் கருதினரோ அதையே தங்களைக் "காக்கும் கடவுளர்"க்கும் அர்ப்பணம் செய்யத் தொடங்கினர். அவ்வழக்கம் இன்றும் ஆணிவேர் சல்லி வேர்களுடன் அசையாது நிற்கின்றது. சிவாலயங்களிலும் விஷ்ணு வாலயங்களிலும் சில நூறு ஆண்டுகளாகத் தூய உணவு கடவுளர்க்குப் படைக்கப்படுகின்றது. புளிச்சாதம், தயிர்ச்சாதம் சர்க்கரைப் பொங்கல், வெண் பொங்கல், சுண்டல், வடை, பாயசம், தேங்குழல், தோசை முதலிய—புலாலுண்ணாத மக்கள் பெரிதும் விரும்பும் உணவு வகைகள் கடவுளர்க்கு நைவேத்தியம் செய்யப்படுகின்றன. இவை மக்கள் அறிவு விளக்கமும் நாகரிகமும் பெற்ற பிறகு தோன்றிய உணவுகளாகும். பின்னர் கடவுளர்க்கும் அவைகளையே படைக்கத் தொடங்கினர். அவை சாஸ்திர சம்மதமும் பெற்றன. ஆதியில் தேவதைகட்கு உயிர்ப்பலியும் இவ்வாறே ஏற்பட்டிருக்கவேண்டும் என்று எண்ணுவதில் ஒன்றும் தவறு இருக்காது என்று நம்புகிறோம். ஸ்ரீ ராமபிரானைக் காணக் குகன் வந்தபோது மாமிச வுணவைக் கையுறையாகக் கொணர்ந்ததும், கண்ணப்பர் காளத்திநாதரின் பொருட்டுத் தேர்ந்தெடுத்த மாமிச வுணவைக் கொணர்ந்ததும் எமது கூற்றை வலியுறுத்தி நிற்கின்றன.

மக்கட்குச் சமய ஞானமும் ஒழுக்க அறிவும் கடவுள் வழிபாட்டு முறையும் உணர்த்தவேண்டியது சமயத்தலைவர்களின் இன்றியமையாக் கடமை. ஆனால் நம் நாட்டுச் சமயத் தலைவர்களாகிய மடாதிபதிகளும், ஜீயர்களும், ஆச்சாரியர்களும் தங்கள் கடமைகளை உணர்ந்து நடப்பதாகத் தெரியவில்லை. நமது சமயத் தலைவர்கட்கு மிகுதியான பொருள் வருவாயும் சௌகரியங்களும் இருந்தும் அவர்கள் மக்கள் முன்னேற்ற விஷயத்தில் கவலை செலுத்துவதில்லை. இவர்கட்குக் கிடைக்கும் லக்ஷக்கணக்கான ரூபாய்களும் வீணிற் கழிந்துகொண்டிருக்கின்றன. சமயத் தலைவர்கள் மக்கட்கு சமய உண்மைகளைத் தெரிவித்து உயிர்ப்பலி போன்ற கோரச் செயல்களை எளிதில் நீக்கிவிடலாம். நாட்டில் பொருளற்ற வழக்க வொழுக்கங்கள் நிறைந்திருப்பதற்கு உண்மைச் சமய ஞானமும் கல்வி யறிவும் இன்மையே காரணமாகும். ஆடம்பர மோகங்களிலும் கோர்ட்டு வழக்குகளிலும் பாழாகும் பெருந் தொகைகளில் ஒரு சிறு பகுதியேனும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கு என்று செலவிடப்பட்டால் எத்துணையோ நலங்களை எதிர் பார்க்கலாம். கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் கடல் கடந்து வந்து எம்முறையில் சமயத் தொண்டாற்றுகின்றனர் என்னும் உண்மையை நமது சமயத் தலைவர்கள் அறியார்களா? அறிந்தும் வாளாயிருந்து வருகின்றனர் என்றே கூறி வருந்துகிறோம்.

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

ஓம் தத் ஸத்.

# மேனாட்டு விழுச் செல்வம்

(பெ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

1 ஏதேனும் பழுதிலாத தொன்றை இயற்ற முயல்வதைப்போல் ஆன்மாவைப் புனிதமாக்குவதும் சமய வாழ்வு வாழச் செய்வதுமானது வேறெதுவு மில்லை. ஏனெனில் பரிபூரணமே கடவுள், அதனால் பூரணத்தை நாடி முயல்பவன் கடவுள் தன்மையை நாடுபவனாவான்.
மைக்கேல் ஏஞ்ஜலோ.

2 இரக்கம் காட்டும் சந்தர்ப்ப தினுசுகளின் தொகையின் அளவே, ஆன்மாவின் பெருந்தன்மை யாகும். பேக்கன்.

3 "வினைப்பயன்" என்பதைப் பிறர் விஷயத்தில் நம்பியும் தம் விஷயத்தில் நம்பாமலும் இருக்கக் கூடுமானால் அது பெரும் பாக்கியமாகும்.
மில்.

4 ஞானிகள் முயலவேண்டுவது உலகத்தை வெறுக்கவன்று, அறியவே யாகும். கதே.

5 ஜனங்களிடை இரக்கமும் சகோதர அனுதாபமுமே மனிதவாழ்வில் பெறுவதற்காக முயலவேண்டிய பேருணர்ச்சிகளாகும். மார்லி.

6 உண்மையே தெய்விகம் பொருந்தியது. சுதந்தரம் இரண்டாவது ஸ்தானம் பெறும். உண்மை உணர்வதற்குச் சுதந்தரம் அவசியமானாலும் சுதந்தரத்தோடு உண்மை சேராவிடில், சுதந்தரத்தால் ஒருபயனும் உண்டாகாது. மார்லி.

7 கவிஞன் சாதாரண விஷயங்களும் சந்தோஷம் தரத்தக்க வண்ணம் வாழ்வை நடத்துதல் வேண்டும். எமர்ஸன்.

8 யாரையேனும் மதித்துத்தான் தீரவேண்டுமானால், அவர் பிழையின் சுமையைத் தாங்கும் விதத்தைவைத்து மதிக்க வேண்டுமேயன்றி, அவர் அச்சுமையை ஏற்படுத்திக்கொண்ட காரியத்தை வைத்து மதிக்கலாகாது. மார்லி.

9 நான் "ஒருவன் என்ன நினைத்தான்" என்று அறிய விரும்புகிறேனேயன்றி "அவன் என்ன நினைத்திருக்கவேண்டும்" என்று பிறனொருவன் கூறுவதைக் கேட்க விரும்பவில்லை. கதே.

10 "இரக்கம்," "நீதி" இரண்டும் சிறுமொழிகள். ஆனால் அவைகளை அனுஷ்டானத்திற்குமட்டும் கொண்டுவந்து விட்டால், அறநெறி விஷயங்கள் அனைத்தும் அவற்றுள் அடங்கி விடும். ஜார்ஜ் எலியட்.

11 வாழ்வு பொதுவாக மனிதர்க்கு நன்மையே யாயினும் பலர்க்கு நன்மையாவது சந்தேகம், சிலர்க்கு நன்மையே யன்று. ஜார்ஜ் எலியட்.

12 ஜனங்களின் நன்மை நாடுவதற்குரிய நல்லுணர்ச்சிகளை எழுப்புவதே என் வேலை. அந்த நன்மையை அமைத்துக் கொள்வதற்குரிய வழிகளை வகுப்பதன்று, கவி யுள்ளத்தில் ஜனங்கள்பால் அன்பு எவ்வளவு அதிகமாயிருப்பினும், வழிகளைத் தீர்மானிக்கும் சக்தி உயர்ந்ததாய்க் காண்பது அநேகமாய் அரிது. ஜார்ஜ் எலியட்.

13 மனிதன் பிறந்துள்ளது உண்மையைத் தேடவே. ஆனால் அதை அடையும் பாக்கியம் வேறோர் பெரியசக்திக்கே உண்டு. மாண்டெயின்.

14 கடவுள் வலது கையில் முழு உண்மையையும், இடது கையில் உண்மையைத் தேடுவதில் அழியா ஆசையும் வைத்துக்கொண்டு எது வேண்டும் என்று என்னைக்கேட்டால்—இடது கையில் உள்ளதை விரும்பினால் என்றும் இருட்டிலேயே இருக்கவேண்டி யிருப்பினும்—நான் இடது கை முன் தலையைத்தாழ்த்தி "தந்தையே, தாரும்; உண்மை உமக்கே உரியது" என்று கூறுவேன். ஏனெனில் மனிதன் உண்மையை அடைவதாலன்றி உண்மையைத் தேடுவதாலேயே பரிபூரணத்துவத்தைத் தன்னிடம் இடைவிடாது வளர்த்துக் கொள்வதற்குரிய தன் சக்திகளை விருத்தி செய்து கொள்கிறான். லெஸ்ஸிங்.

15 தீயநெறியில் செல்லாதிருக்க எப்பொழுதும் எச்சரிக்கையா யிருப்பதை விட நல்ல விஷயங்களில் மனதை ஈடுபடுத்தி அதன் மூலம் தீயநெறி நினைவே எழாதிருக்கச் செய்வதே நலம். பித்தாகோரஸ்.

16 நம்மிடம் பகைப்பதற்குப் போதுமான சமய உணர்ச்சி உளது. ஆனால் அன்பு செய்வதற்குப் போதுமான அளவு இல்லை. ஸ்விட்.

17 மனிதர் அவசியம் கவனிக்க வேண்டிய உண்மையான, நியாயமான, கௌரவமான விஷயம் தங்களைச் சுற்றியுள்ளவர், தங்களுக்குப் பின் வாழப் போவர் இருவருடைய நன்மையை நாடுவதே.
ஹாரியட் மார்ட்டினோ.

18 சோம்பலில் இன்பம் இல்லை; அனுபவத்திலும் அதிகநேரம் இன்பம் காண முடியாது. ஆசைப்பட்டு அடைய முயல்வதிலேயே இன்பம் உண்டு.

19 மனிதனுடைய உடைமையா யிருக்கக்கூடியது அறிவு ஒன்றே. ஆகையால் அறிவை விருத்தி செய்வதே ஆசைப்பட்டு அடைய முயலத்தக்க ஒரே வெற்றியாகும்.

20 உலகத்தில் வெகு சிலரே தனியாக வாழத் தகுதி யுடையவர். அவர்களுக்கு உலகத்தின் மாயத்தை அறியப்போதுமான லௌகிக ஞானமும் சகல மாயத்தையும் வெறுத்துத் தள்ளப் போதுமான அறவொழுக்கமும் இருக்கவேண்டும். கௌலி.

21 தன்னலமின்மையும் நாணமுமே மெய்ஞ்ஞானத்தின் இலக்கணம். ரஸ்கின்.

22 மெய்ஞ்ஞானம் "கடவுளிடம் அடக்கம்—ஜீவர்களிடம் அன்பு—தன்னிடம் அறிவு—உண்டாக்கும். ரஸ்கின்.

23 எத்தனை உயர்ந்தோரை அறிய முடியுமோ அத்தனை உயர்ந்தோரைத் தான் சார்ந்து நிற்பதும், எத்தனை தாழ்ந்தோரை அணுகக் கூடுமோ அத்தனை தாழ்ந்தோர் தன்னைச் சார்ந்து நிற்பதுமே ஆன்மாவின் உண்மையான ஆற்றலாகும். ரஸ்கின்.




# வாலி மோக்ஷம்.



(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)



(376-ம் பக்கத் தொடர்ச்சி.)

வாலி மோக்ஷம் என்ற தலைப்பின்கீழ் தொடங்கிய இவ் வியாசத்தின் முற்பகுதியாக, "வாலி, மோக்ஷமடைந்தா னென்பது உபசாரச் சொல்லேயன்றி உண்மையன்றாம். ஏனெனில், மற்றீண்டுவாரா நெறியாகிய மோக்ஷத்தை யடைதற் கேற்ற நிலையில் அவன் இல்லை. அவன் ஞானியல்லன். அன்றியும் மீண்டும் மறுபிறப்பில் வேடனாகப் பிறந்தானெனப் பாரதம் பகர்கின்றது எனவும், அவ் வாலியின் வரலாறு இன்னதெனவும், அவனுக்கு மவன் பின்னவனாகிய சுக்கிரீவனுக்கும் பகை நேர்ந்ததன் காரண மின்னதெனவும், அவனது சூழ்ச்சியாலேயே இரகு வீரன் வாலியை வதைத்தானெனவும், அவ்வாறு வதைத்தது நியாயமாகுமா வென்றாராயத் தொடங்கிக் கொன்றது நியாயமன்றெனவும், மறைந்து நின்று வதைத்ததும் நிராயுதனைப் பிறனோடு போர்செய்து கொண்டிருந்தவனைப் பொன்றுவித்ததும் அதினும் பெரிய அநீதியா மெனவும்" கடந்த மாத விதழில் வரைந்தாம். இனி, இராமன் வாலியைக் கொன்றது குற்றத்தின்பாற் படாது என்பதற்குக் காட்டும் வேறு சில சமாதானங்களையு மாராய்வாம்.

மறைந்து நின்று நிராயுதன்மேல் வாளி யெய்ததற்கு வேறொரு சமாதானம் சாற்றப்படுகின்றது. அதாவது, இராகவன் வாலியை நோக்கி, "கவிகுலக் காவல! வேட்டஞ் செய்தற்குரிய வேந்தர், காட்டி லெதிர்ப்பட்ட விலங்குகளை மறைந்திருந்து கொல்லுதல் முறைமையே யாகும். ஆகலின், விலங்காகிய வுன்னை மறைந்து நின்று கணையா லடித்தது குற்றமாகா" தெனக் கூறியுள்ளார் என்பதாம். இச்சமாதானமும் அவருக்குச் சாதகமாகாது. "இந்திரன் குமாரனா யிருத்தலானும், கல்வி கேள்விகளை யுடையை யாதலானும், சிவபூஜையிற் சிறந்தவனா யிருத்தலானும், அறிவில்லாத மிருகங்களுக்குச் சாத்தியமாகாத

---

ஒவ்வொரு மனிதனும் தனக்கு இயற்கையில் அமைந்துள்ள குணங்களை எல்லாம் உபயோகிக்கும் வரையே உண்மையில் வாழ்பவனாகக் கருதப்படுவான்.

இத்தகைய தரும நியாயங்களை யெடுத்துக்காட்டி என்னெதிரிற் பேசுதலானும், நீ மிருகமன் றென்பது திண்ணமாக, 'மிருகங்களாகிய வெங்களுக்கு மணமில்லை, முறையில்லை, பிரியமானவர்களைப் பெண்டாகக் கொள்ளலாம்' என்றியம்புதல் பிழையுடையதாகும்'' எனக் காரணங்காட்டிக் கண்டித்த காகுத்தன், "நீ மிருகமாகையினால் ஒளித்து நின்று வாளி யெய்தது நியாயமா'' மென நிகழ்த்துவது முன்னுக்குப் பின் முரண்படுவதாகுமே! மேலும், விலங்குகளை வேட்டையாடினது வாலி வதத்திற்கு முன்னும் பின்னும் இராமன்பால் நிகழ்ந்ததில்லையே. தம்மெதிர்ப்பட்ட பிற விலங்குகளைக் கோறல் புரியாது இத்தகைய சமாதானம் கூறுவது சரியாகாதே.

வாலியைக்கொல்லாது அவனோடு நட்புக்கொண்டிருப்பின், அவ் வாலி, இராவணன் இராகவனுக்கிழைத்த இன்னலையறிந்து, இராவணனை யழைப்பித்து "அடே! அரக்கனே! சீதாதேவியை இக்கணமே ஈண்டுக் கொணர்ந்து விட்டு சீதாபதியின் திருவடிகளில் அடைக்கலம் புகுவா'' யென்றோர் வார்த்தை வெளியிடுவானாயின், இராவணனஞ்சி அவ்வாறே சீதையைத் தசரதாத்மஜன் பக்கலிற் சேர்ப்பான். அதனால், இராமனுடைய சங்கற்பப்படியும் தண்டகாரணிய வாசிகளுக்களித்த வாக்குறுதியின்படியும் அரக்கர் வதம் நடைபெறுமற் போய்விடும். அதுபற்றியே வாலியை வதைக்க நேர்ந்ததெனவோர் சமாதானம் கூறப்படுகின்றது.

இது ஒருவாறு பொருத்த முடையதெனக் கூறலாம். பாரதப்போர் நிகழ்ந்தபோதும் பார்த்தசாரதி இவ்வாறே ஒருபாயம் செய்திருக்கின்றார். அருச்சுனன் மைந்தனாகிய அரவானென்போன் கொற்ற வெம்படை யனைத்து மோரம்பினால் ஓர் தினத்திற் கொன்றழிப்பான். அவன் அவ்வாறு செய்திடின் தன் கருத்தின்படி இரு தரத்தார் சேனைகளும் அழிதற்கு ஏதுவில்லாமற் போய்விடும். பாண்டவ ரைவரைத்தவிர மற்றெல்லோரையு மொழித்தல் வேண்டுமென்பது அவரது சங்கற்பம். இவ்வாறு பாரத வமரில் யாவரையும் நீறுக்கக் கருதி யிருப்பதை யறிந்துதான், பஞ்சவரி லிளையவனாகிய சகாதேவன், 'வந்தடைந்தே மைவரையும் நின்பார்வையாற் காக்கவேண்டும்'எனக் கேட்டு உறுதிமொழி பெற்றுக்கொண்டான். ஆகவே, அரவான் செய்கை தன் னெண்ணத்திற்கு மாறாக விருந்ததுபற்றியே, அவனைத் தொலைத்துவிட லவசியமா மெனச் சூழ்ச்சி செய்து, அவனைக் களப்பலி யிடுவித்தனர்.

இத்தன்மையை நோக்கும்போது, இந்தவகையில், வாலியை யகற்ற வேண்டியதே யெனத் தோன்றுகின்றதாயினும், வாலியைக் காலன்வாய்ச் சேர்க்காமலே இக்காரியத்தை நிறைவேற்றுதல் அசாத்தியமன்று. மாருதி மைதிலியாரைத் தேடிச் சென்று இலங்கையில் அசோக வனத்தின்கண் கண்ணுற்றுத் தன் வரலாற்றைச் சாற்றிய பின்னர் "அம்மணி! தாங்கள் ஈண்டிவ்வாறு பரிதபித்துக்கொண் டிருப்பதேன்? அடியேனது தோளின்மீது ஆரோகணித்துக் கொள்ளுங்கள். அரைநொடியில் ஐயனிடம் கொண்டு போய் விடுகிறேன்'' எனக் கூறினான். அது கேட்ட பிராட்டியார் "மைந்த! உனதாற்றலில் எனக்கு அணுவளவேனும் ஐயமிலது. சொன்னவண்ணமே செய்வாய் எனினும், அது விரும்பத்தக்க தல்லவே. அவ்வாறு செய்வது நம

"அபாயம்''—பெரியோரை உயர்ந்த லட்சியங்களுக்கு ஊக்கும் தூண்டுகோல்.

தையனாகிய இரகுகுலோத்தமருக்குப் பரிகரிக்க முடியாத பழியை நல்குமே! அதனாலன்றோ யானிதுகாறும் ஈண்டுச் சிறைப்பட்டிருக்கின்றேன்.

"அல்லல் மாக்களிலங்கைய தாகுமோ ?
எல்லைநீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லினாற் சுடுவேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்"

யான் நினைப்பேனாயின் இவ்விலங்கை மாத்திரமோ? எல்லா வுலகங்களையும் சொல்லொன்றினால் நீறுபட்டழியச் செய்ய மாட்டேனோ! கடல் வண்ண மேனி காகுத்தனே வந்து என்னை மீட்டுச் செல்லாமல், யானே விடுவித்துக் கொண்டு செல்வது அப்பெருமானது கோதண்டத்திற்கு அபகீர்த்தி யுண்டாக்கு மென்றல்லவோ அஞ்சினேன்" எனத் தடுத்துக் கூறி யனுப்பி விட்டார். அங்ஙனங்கூறாது அனுமன் வார்த்தைக் குடன்பட்டு வந்திருப்பின் இராவண சம்ஹாரமும் நடைபெறாமற் போயிருக்கு மென்பது திண்ணம். அது போலவே, இராமபிரானும் வாலியை நோக்கி "நீ எனது இந்தக் காரியத்தில் தலையிடலாகாது. எனக்கு நேர்ந்த பழியைத் துடைப்பதென் கடமையாகும். உன்னால் யான் அதனைப் பெறுவேனாயின் எனக்கும் என் மரபினுக்கும் தீராத வசையையே விளைக்கும்" எனக் கூறித் தடுத்துத் தன் கருத்தை முடித்திருக்கலாம். ஆகலின் இச்சமாதானம் உறுதியுடைய தன்று.

அபராதியைச் சிக்ஷித்து நிரபராதிக் குதவி செய்தல் நிருபர்க்குரிய முறைமையாகலின் சுக்கிரீவனது தாரத்தைக் கவர்ந்த வாலியைத் தண்டிப்பது நீதியேயாம் என்பது மற்றோர் சமாதானம். வாலியைக்கண்டு அவன் குற்றத்தை யவனுக்குக்காட்டி அவன் கவர்ந்த மாதினைத் திரும்பவும் சேர்ப்பித்திருக்கலாம். அவ்வாறு விடுதற்கிசையானாயின் தண்டனை செய்தல் ஏற்றதாகும். ஸ்ரீராமனே இராவணன் தன்னோடாற்றிய முதல்நாள் யுத்தத்தில் தோல்வியுற்று அவமானப்பட்டு நின்ற காலத்து அவனை நோக்கி,

"ஆளையா! உனக் கமைந்தன மாருத மடைந்த
பூளையாயின கண்டனை. இன்று போய்போர்க்கு
நாளைவாவென நல்கினன்."

"இலங்கேசா! உன் வீரமெங்கே! உன்னுடன் வந்த சேனைகளெல்லாம் அழிந்தன. நீயும் நிராயுதனாகினை. இப்பொழுதே திரும்பிச் சென்று இன்னும் போர் செய்யலாம் என்னும் வீரமும் விருப்பமு மிருக்குமாயின் நாளைக்கு வா" எனக் கூறியனுப்பிவிட்டன ரன்றோ! அன்றியும், சீதையைக் கொண்டு வந்து விட்டால் உயிர்வாழ்ந்திருக்கலாம் என அங்கதனிடம் கூறித் தூதனுப்பவில்லையோ! அவ்வாறு வாலியைக் கேட்டு அவன் சுக்கிரீவன் மனைவியை விட்டிருந்தால், அவனைக் கொலை செய்யாதிருந்திருக்கலாம்; விட மறுத்தால் கொன்றிருக்கலாம். அங்ஙனம் செய்யாமல் தண்டித்தது நீதியாகாதன்றோ! எனவே, எவ்வாற்றா லாராயினும் இராமர் வாலியை வதைத்தது நியாமன்றென்பது தெளிவாகின்றது.

இதுகாறும் கழறிய ஆக்ஷேபங்கள் ஒருவரிருவர்க்கல்ல. பலர்க்குள. இவ்வாக்ஷேபங்களில் உண்மையில்லாமலுமில்லை. இவைபோன்ற வேறு சில

ஆக்ஷேபங்களையும் கூறுவரேனும் அவையனைத்தையு மெடுத்துக்காட்டிப் பொழுது போக்குவது ஏற்புடையதாகாது. இனி, இவ்வாலிமோக்ஷக் கதையால் அத்தியாவசியமாக அறியவேண்டிய உண்மை யொன்றுளது. அதனை வற்புறுத்திக் காட்டுவதே இச் சரிதையின் முக்கிய நோக்கமா மென்பது ஆன்றோர் துணிவு. அவ்வுண்மையை யறிந்துகொள்ளின் இத்தகைய ஆக்ஷேபங்களுக்குச் சிறிதுமிடமிராது. ஆகலின், அதனைச் சிறிதளவு கண்டுக் காட்டுவாம்.

சுக்கிரீவனென்பவன் மோக்ஷாபேக்ஷை யுடையவனான அதிகாரி புருஷன். வாலியென்பவன் தாமத குணம். வாலியால் சுக்கிரீவன் துன்புற்றானென்றது, தாமத குணமாகிய மூடவிருத்தியால் அதிகாரி புருஷன் துன்பற்றானென்பதாம். வாலி சுக்கிரீவன் மனைவியைக் கவர்ந்தானென்பது, தாமத குணத்தால் சத்துவகுண நீக்கம். சுக்கிரீவன் வாலிக்கு பயந்து அவன் செல்லக்கூடாததோரிடத்தில் வானரங்களோடு வசித்துவந்தா னென்பது, அதிகாரி புருஷன் தாமத குணத்தை யஞ்சி அது அணுகமுடியாத சாது சங்கத்தை யடுத்து சாதுக்களோடு வசித்தல். அங்கு வசிக்குங் காலத்திலும் "வாலியை யொழித்துத் தன் மனைவியை யடைவதென்றோ?" என்றேக்கங் கொண்டிருந்தானென்பது, சாதுக்களிடையே வசித்திருந்த காலத்தும் தாமத குணத்தை யொழித்து மோட்சானு குணமான சத்துவ குணத்தை யடைவதென்றோ என்றேக்கங்கொண் டிருந்தா னென்பதாம். இராமபிரானைக் காண்டல் சத்குரு தரிசனம். இராமனைச் சரணாகதி யடைதல் சதாசாரியனைச் சரணாகதி யடைதலாம். ஏழு மராமரங்கள் ஏழு அஞ்ஞான பூமிகள். அவையாவன:— (1) பீஜசாக்கிரம். (2) சாக்கிரம். (3) மகாசாக்கிரம். (4) சாக்கிர சொப்பனம். (5) சொப்பனம். (6) சொப்பன சாக்கிரம். (7) சுழுத்தி என்பனவாம். இவற்றுள்,

(1) பீஜசாக்கிரம்:—இராக்காலத்தில் படுத்து நித்திரைசெய்து காலையில் விழிப்படையுங் காலத்தில் முதன் முதலாக ஒருணர்வு உண்டாகின்றது. அவ்வுணர்வு 'நான்' என்றவ்வளவையே யுடையது. அப்போது தேக உணர்ச்சியும் எங்கு படுத்திருக்கிறோ மென்பது முதலிய உணர்ச்சிகளு முண்டாவதில்லை. அதன்பின்னரே அவையனைத்தும் தோன்றும். அவ்வாறு 'நான்' என்றுள்ள அவ்வுணர்வு நில மாயையோடு கூடிய சேதனத்தினின் றுண்டான ஆபாச சேதனமாம். இதுவே தேகோற்பத்தி காலத்தினும், தேகோற்பத்தியின் பின்னுண்டாகி விருத்தி யடையும்படியான சித்தம். சீவன் முதலிய பெயர்களுக்கும் அவற்றின் அர்த்தங்களுக்கும் காரணமா யிருப்பதாம். இது பற்றியே இது பீஜ சாக்கிரமெனப் படுகின்றது. இதனை வித்து நனவு எனவும் கூறுவர்.

"சித்திலே நின்றோ ரறிவுபே ரின்றிச் செறிமல மின்றிமேல்வந்து
வர்த்தியா நிற்குஞ் சித்த சீவாதி வருபெயர் செயல்களுக் கிடமாய்
வித்து ரூபமதாய் நின்றிடுமதனால் விதை நனவா முதற்பதமே"

என ஞானவாசிட்டமும்,

"மூர்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத்திரமதுதான் முதல்வித்தாகும்"

எனக் கைவல்லிய நவநீதமும் கூறுதல் காண்க.

(2) சாக்கிரம்:—முதலில் தோன்றிய பீஜ சாக்கிரமாகிய 'நான்' என்பது மட்டுந் தோன்றுவதாகிய அவ்வுணர்வு தோன்றிய பின்னர், அதினின்று நாம்

இன்னூரென்பதும் இன்னவிடத்தில் சயனித்திருக்கிறே மென்பதும் தேக வுணர்வும் எழுந்து இன்னகாரியஞ் செய்யவேண்டுமென்னு மெண்ணமுமாகிய அகங்கார மமகாரங்கள் தோன்றும். அந்த நிலையே சாக்கிர நிலையாம்.

"இதுவறிவுக்கு முதலவத்தையதா மிதத்துறப் பிறந்தபின் னிவனுன்
இதுவெனப் பண்டிலாமையயா னெய்தா யெழுந்துள வறுதியே
[நனுவாம்"

என்று ஞானவாசிட்டமும்,

"இந்த வறிவிற் பண்டில்லா வகந்தை முளைப்போலா மிது நனுவாம்"
என்று கைவல்லியமும் கழறுதல் காண்க.

(3) மகாசாக்கிரம்:—எல்லாப் பிறவிகளினும் இந்த அகங்கார மமகாரங்கள் இடைவிடாது வந்து வந்து பற்றுவது மகா சாக்கிரமாம்.

"இத்தனை யொழிய விவனவனுனே யிதுவது என்னதென் றெண்ணும்
இது முதற் பிறப்பிற் றொடர்ச்சியாய்ப் பலர்க்குமிந்த நிச்சயம்
[பெருநனுவாம்."

என்று ஞானவாசிட்டமும்,

"வந்து வந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாநனுவாம்"
என்று கைவல்லியமும் இதனை விளக்குகின்றன.

(4) சாக்கிர சொப்பனம்:—சாக்கிரத்தில் முன்னம் பூரணமாய் அறிந்துள்ள விஷயங்களைப் பற்றியோ பூரணமா யறியாத விஷயங்களைப்பற்றியோ மனோராஜ்யம் செய்தலே சாக்கிர சொப்பனமாம்.

"அறிந்துள தெனினு மறியலா தெனினும் அழுந்துறத்தானதுவாகிச்
செறிந்துள நனவிற் சித்த ராச்சியமே செய்வது நனுக்கனவாகும்,"

என்றும்,

"நந்துமகங் கொடுநனவின் மனோராச்சியஞ் செயலே நனுக்கனுவே"
என்றும், முறையே ஞானவாசிட்டமும் கைவல்லிய நவநீதமும் நவிறல் காண்க.

(5) சொப்பனமாவது:—சாப்பிட்டு நித்திரைசெய்து விழித்து அற்ப காலத்தில் அநேக விஷயங்களைக் கண்டறிந்ததாக மனோராச்சியம் செய்வது சொப்பனமாம்.

"அற்பகாலத்தி லநேகமாஞ் செயல்கண் டறிந்தனமெனுங் கனவழிந்து
முற்படு செயலை நினைவது கனவாம்." (ஞானவாசிட்டம்)

"உண்டுறங்கி மனோராச்சியஞ் செயல் சொப்பனமெனும் பேருடைய
தாகும்" (கைவல்யம்)

(6) சொப்பன சாக்கிரமாவது:—

முன்னே சொப்பனங்கண்டு மறந்துபோன விஷயத்தை மீண்டும் ஞாபகப்படுத்துவது சொப்பன சாக்கிர மெனப்படும்.

---

ஆக்கமுடையார் ஏக்கமுடையார்.

"மூந்து கண்டதனை நாளகன்று
பிற்படக்காணும் பொருள்களை மறந்து
பெரும்பொழு துணர்வுற நோக்கும்
சொற்பன நனவுபோல் நனவுக்கே தோன்றுமிச் செயல்களு
[நனவே"

"பண்டுகளுக் கண்டுமறந் ததைமீண்டு
நினைப்பது சொப்பன நனவாம்"

என்றார் பிறரும்.

(7) சுழுத்தியாவது:—

மிகுந்த இருள் மூடிக்கொள்வது சுழுத்தியாம். அதாவது மேலே சொல்லப்பட்ட ஆறுவகை நிலைகளும் நீங்கி அஞ்ஞானவடிவ இருளால் மூடப்பட்டுச் சடமாயுள்ள நிலையே சுழுத்தியாம். இதுவே ஒன்றுந் தெரியாமல் ஆனந்தமாய்த் தூங்கினேன் என்றியம்பத்தக்க நிலை.

"அறுவகை யவத்தை யகற்றிய சீவன்
அடைந்துள அவத்தையி னியற்கை
யுறுசடமாகி மேல்வருந் துயர்கூர்
உணர்வுள நாமிது சுழுத்தி"

"மண்டு மிருள்மூடுவது சுழுத்தி யாகும்"

அஞ்ஞான நிலைகளாகிய இவ்வேழுமே ஏழுமராமரங்களாம். இவ்வஞ்ஞான பூமி (அவஸ்தை)க ளழித்தற்கருமையா யிருத்தல்பற்றியே மராமரங்கள் ஒருவரானும் அழித்தற் கருமையாம்படி வைரம்பெற் றிருந்தனவெனக் கூறுவர். அவற்றை—அவற்றுளொன்றேனுமொன்றையாவது அழிக்க வல்லவரே, தாமத குண விருத்தியாகிய வாலியைக் கொல்ல வல்லவராவர். அம்மரங்களேழும் இராமனால் அழிந்தனவென்பது சதாசாரியனால் அஞ்ஞான பூமிகளேழு மழிந்தனவென்பதாம். துந்துபியினுடலை இராமன் தம்பியாகிய இலக்குமணனால் நீக்கினனென்றது, சதாசாரியன் தத்துவ விசாரத்தால் தேகாபிமானத்தை (தேகமே நான் எனக் கொண்டிருந்த அபிமானத்தை) அகற்றியதாம். இராமன் வாலியை மறைந்து நின்று கணைதொடுத்துக் கொன்றானென்றது சற்குருவானவர் இரகசியமாக வுபதேசித்த (இதுவே மறைந்து நிற்றல்) 'தத்துவமசி' மகாவாக்கிய உபதேசத்தால் (இதுவே இராமபாணம்) உண்டான ஞானத்தால் சனன மரண சம்சாரத்திற் கேதுவாகிய அஞ்ஞான மென்கிற காரண சரீரம்—"அரிய மெய்ஞ்ஞானத் தீயா லவித்தையா மூடல் நீறாகும்" (கைவல்லியம்) என்றபடி, நசித்தலே வாலி மரணமாம். பின்னர் சுக்கிரீவன் மனைவியை யடைந்து மகுடாபிடேகஞ் செய்யப்பெற்றவனாய்ச் சுகமா யரசாண்டிருந்தானென்பது, அதிகாரிபுருஷன் சத்துவகுணத்தை யடைந்து சீவபாவத்தை யகற்றிக் கூடஸ்தப் பிரமமாகி சச்சிதானந்த சொரூபியாய்ச் சீவன் முக்தனாய்த் திகழ்ந்தான் என்பதாம்.

---

இன்பமொழியே துன்ப மகற்றும்.

எனவே, "இவனதி காரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌதிகங்களாலும்
தவனமூன்றடைந்து வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பலமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினனே"

என்றபடி, அதிகாரி புருஷனொருவன் தன்னை நன்மார்க்கத்திற் செல்லவிடாது தடுத்து அலைக்கழிக்கும்படியான மாயாமய தாமத குணத்திற்கஞ்சி சாதுக்கள் கூட்டத்தைச் சேர்ந்து அச் சாது வாயிலாக சற்குருவைக்கண்டு

"வணங்கி நின்றழுது சொல்வான் மாயவாழ்வெனுஞ் சோகத்தால்
உணங்கினே னையனேயென் உள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோசபாசப் பின்னலைச் சின்னமாக்கி
இணங்கிய குருவே யென்னை யீடேற்ற வேண்டும்"

என்றடிதொழுது விண்ணப்பிக்க குருதேவரும் அவனைத்தேற்றி, அவனது அஞ்ஞானத்தை யகற்றி, ஆத்மானாத்ம விசாரத்தால் 'உடலை நானென்றும், அந்த உடலைப்பற்றி வந்தபொருள்களை எனதென்றும்' எண்ணும் அகங்கார மமகாரங்களை நீக்கித் 'தத்துவமசி' மகாவாக்கிய உபதேசத்தால் அஞ்ஞான மாகிய காரணதேகத்தை யொழித்தருளினர். அவ்வளவில் அவ்வதிகாரி புருஷன் ஜீவபாவம் நீங்கப் பெற்றவனாய் ஜீவசாக்ஷியாகிய கூடஸ்தனே தானென் றறிந்து ஆன்மசாக்ஷாத் காரமெய்தி, சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்த வடிவமோக்ஷத்தை யெய்தினன் என்பதே வாலிமோக்ஷக் கதையின் தத்துவமா மென்பது ஆன்றோர் அபிப்பிராயமாம்.

ஆனால், வாலி, மோக்ஷமடைந்ததாகக் கூறுதலாலன்றோ இதற்கு வாலி மோக்ஷமென்னும் பெயருண்டாயிற்று? ஆகவே இப்பெயருக்கும் மேற் கூறிய தத்துவத்திற்கும் பொருத்தமில்லையே. இதில் சுக்கிரீவனாகிய அதிகாரி புருஷனல்லவோ முத்திநிலை யெய்தின னென்று சொல்லப்பட்ட தெனின்; மோக்ஷம் என்பதற்கு விடுதலை யென்பது பொருளாகலின், 'தமோகுணவடிவ மாயையின் நீக்கம்' எனப் பொருள் கொள்ளின் யாதும் முரணின்றாதல் காண்க.

இனி, வாலிமோக்ஷத்தின் அந்த ரார்த்தம் வேறு விதமாகவும் ஆன்றோரால் உரைக்கப்படும். எவ்வாறாயினும் இதிகாச முறையில் காணின் பல முரண்கள் காணப்படுவதியல்பே. ஆகவே, அவ்வாறு முரண்பாடு தோன்றுமிடங்களில் இதற்கேதேனும் இரகசியார்த்தங்கள் இருத்தல் வேண்டுமென் றெண்ணி யுற்றுநோக்குவோமாயின் பெறலரும் பொருட்களைப் பெறலாம். அன்றியும் இராமாயணகதை முழுவதும் தத்துவார்த்தங்களடங்கியதோர் கதையாகும். அத்தத்துவப் பொருள்களை வேதவித்துக்களும் பிரஹ்ம நிஷ்டர்களுமாகிய பெரியோர்களை யடுத்துக் கேட்போமாயின், அரிப்புக்காரர்களாகிய அப்பெரியோர்கள் பொன்மணி முதலிய அரிய பொருள்களை யெடுத்தளிப்பார்கள். நாமும் அவற்றை யணிந்து ஆத்மாராமனுடைய திருவடிகளி லொன்றி, பேரானந்தப் பெருவாழ் வெய்துவோம். அத்தகைய நன்னெறியிற் செலுத்துமாறு வாலி காலனாகிய (மாயாரகிதனாகிய) ஸ்ரீராமச் சந்திரப் பெருமானை எக்காலும் இறைஞ்சுவோமாக.

---

ஈகைப் புகழே தேகப்பயனாம்.

# ராகங்கள்.



(இ. ச. சிவராமலிங்கம் பிள்ளை.)

இராகங்களின் தொகையைப் பற்றிச் சாமானிய ஜனங்களுக்கிடையில் பல அபிப்பிராயங்கள் உண்டு. சிலர் இராகங்களை நிர்ணயப்படுத்துவது அசாத்தியமென்றும், அது பதினாயிரத்திற் கதிகமென்றும் சொல்லுகின்றனர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பதினாறாயிரத் தெட்டு (16008) மனைவியையுடையவர் என்றும், ஒவ்வொரு மனைவியும் ஒவ்வொரு இராகத்தைத் தனித்தனியாகப் பாடிப் பகவானைத் திருப்திகரப்படுத்தினள் என்றும், ஆகவே 16008 இராகங்கள் உண்டென்றும் ஒரு சாரார் துணிகின்றனர். இவ்வாறு பலவாறு கொள்கின்றனரே யன்றி இராகங்களுடைய சரியான தொகை கண்டுபிடிப்பதற்குச் சங்கீத சாஸ்திரத்தில் வல்லவர்களே சிரமம் எடுக்கவேண்டும். பூர்வ ஆசாரியன்மார்களுக்கும் புதிய பண்டிதர்களுக்கு மிடையில் ராகங்களின் தொகைகளைப் பற்றித் தர்க்கங்களும் உண்டாயின. ஆயினும், ஒன்றும் நிர்ணயிக்கப்பட்ட பாடில்லை.

பரத முனிவருடைய மதப்பிரகாரம் பதினெட்டு ஜாதி இராகங்கள் உண்டென்று தோன்றுகிறது. நாட்டிய சாஸ்திர கர்த்தாவாயிருந்த பரத மஹரிஷியின் மதமானது ஒரு காலத்தில் சர்வசம்மதமாயிருந்தது. ஷட்ஜம், ஆர்ஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நைஷாதம் முதலான 18 ஜாதிகள் பரத நாட்டிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன 13-வது நூற்றாண்டின் ஆரம்பத்தில் அதாவது 1210வது வருடம் முதல் 1247 வரை தௌலத்துப்பாத்தில் வாழ்ந்திருந்ததாய் நம்பப்படுகிற சாரங்க தேவரால் எழுதப் பெற்ற "சங்கீதரத்னாகரம்" என்ற புஸ்தகத்தில் இராகங்கள்—மார்க்க ராகங்கள் என்றும், தேசி இராகங்கள் என்றும் இரண்டு வகையாக 86 இராகங்கள் இருப்பதாய் எழுதப்பட்டிருக்கிறது. இப்புஸ்தகத்தை அநுசரித்தும் அங்கீகரித்தும சங்கீத ரசிகருன அஹோபல பண்டிதர் என்பவரால் "சங்கீத பாரிசாதகம்" என்ற ஓர் நூலும் எழுதப்பட்டுள்ளது.

அதன் பிறகு சோமநாத பண்டிதர் என்பவரால் "இராக விபோதம்" என்ற நூல் வெளியாயிற்று. அந்நூலில் 23 ஜனக இராகங்களைப் பற்றியும் 52 ஜன்னிய இராகங்களைப் பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறது. 1475-1553 ஆண்டுகட்கு இடையில் விஜய நகரத்தில் வாழ்ந்திருந்த இம்மிடி ராமதேவ ராய மஹாராஜாவினுடைய ஆதீன பண்டிதரும், சங்கீதரத்னாகர வியாக்கிய கர்த்தாவுமான கல்லிநாத பண்டிதர் 'கலாநிதி' என்ற தமது கிரந்தத்தில் சாரங்கதேவரை அனுசரித்தே இராகங்களைப் பற்றி எழுதியிருக்கிறார். அதற்குப் பிறகு புண்டரீக விடலனென்ற ஓர் பண்டிதரால் எழுதப்பட்ட 'சத்ராக சந்திரோதயம்' என்ற நூலில் 19 மேளக்கர்த்தாக்களையும் சில ஜன்னிய இராகங்களையும் பற்றி மட்டும் சொல்லப்பட்டிருக்கிறது. இராமதேவராயருடைய சமகாலத்தேயிருந்த ராமா மாத்தியன் என்ற ஒருவர், ராமதேவராய

ருடைய சோதரராயிருந்த வேங்கடாத்திரி ராஜாவினுடைய கட்டளையை அநுசரித்து எழுதிய "சுரகலாநிதி" என்ற நூலில் 20 மேளக்கர்த்தா இராகங்களைப் பற்றி விவாதித்துள்ளதாய்த் தெரிகிறது. இந்தச் சுரகலா நிதியிலேயுள்ள சித்தாந்தங்களே வெங்கிடமகியினுடைய காலம் வரை அநுஷ்டானத்திலிருந்தது.

இவ்வாறு ஒவ்வொரு பண்டிதரும் அவரவர்களுடைய யுக்திக் கநுசரித்தவாறு பரத மதத்தைப் பேதப்படுத்திக் கொண்டு வந்திருக்கின்றனரேயன்றிச் சங்கீத சாஸ்திரத்தைச் சரியான ஒரு முடிவிற்குக்கொண்டுவரவில்லை. 1626-ல் அடுத்து ஜீவித்திருந்த தஞ்சாவூர் மகாராஜவான அச்சுதப்ப நாயக்கர் அவர்களுடைய மந்திரியாயிருந்த கோவிந்த தீக்ஷதர், தமிழ் நாட்டில் நடப்பாயிருந்த சங்கீத சாஸ்திர வாதங்களின் சுபாநுபவங்களை அநுசரித்து 'சங்கீத சுராநிதி' என்றொரு நூலெழுதி வெளியிட்டனர். இவருடைய திருக்குமாரனே வெங்கிடமகி யென்ற பேர்பெற்ற வெங்கிடேஸ்வர தீக்ஷதராவார். இவர் அதுவரை நடப்பிலுண்டாயிருந்த 12 சுரஸ்தானங்களை 16 ஆக்கினர். சுத்த மத்திமத்தில் 36-ம் பிரத மத்தியத்தில் 36-ம் ஆக 72 மேளக் கர்த்தா இராகங்களுண்டென்று தீர்மானப்படுத்தி அதற்குப் புதிய பேர்களும் சிருட்டினை செய்தனர். அவர் எழுதிய நூல்தான் சதுர்த்தண்டி பிரகாசிகையாகும். நகாங்கி, ரத்னாங்கி என்ற பேருடைய நூல்கள் வேங்கடமகியினுடையவையல்ல. வேங்கடமகியினுடைய காலமுதல் நாளிதுவரை சங்கீத சாஸ்திர ஞானமுள்ளவர்கள் அபிப்பிராய பேதமில்லாமல் இந்த 72 இராகங்களையும் அங்கீகரித்து வருகின்றனர். இந்த 72 மேளக்கர்த்தா இராகங்கள் ஒவ்வொன்றையும், சம்பூர்ணம், ஷாடவம், ஔடவம் என்றிவ்வாறு மூன்றாயும், அவையினுடைய அவாந்தர பாகங்களை 483 ஜன்னியங்களாகவும் விஸ்தரித்து ஆக 72 மேளக் கர்த்தாக்களுக்குள் அடக்கம் 34848 இராகங்கள் உண்டென்பது சித்தாந்தமாக சர்வ சம்மதமாக இடைக்காலமிருந்தது.

வெங்கடமகியினுடைய இந்தச் சித்தாந்தத்தோடு இணக்கமில்லாதவர்களான சில வித்துவான்கள் இப்பொழுது தோன்றியிருக்கின்றனர். மதுரை நாதசுர வித்துவான் பொன்னுசாமி என்பவர் தோன்றியவர்களில் முதன்மையாவர். இவர் எழுதிய 'பூர்வீக சங்கீத உண்மை' என்ற நூலில் வெங்கிடமகியினுடைய சித்தாந்தத்தை ஆக்ஷேபித்து 72 மேளக்கர்த்தா இராகங்கள் என்பது சரியல்ல வென்றும் உண்மையில் 32 மேளக்கர்த்தா இராகங்களே உள்ளதென்றும் பண்டைய தமிழ் நூல்களையும் சொந்த அநுபவத்தையும் அடிஸ்தானப்படுத்தி ஒரு நூல் எழுதி யிருக்கிறார்.

இதுவன்றி வெங்கிடமகியினுடைய சித்தாந்தத்தை அடிஸ்தானப்படுத்தி சுராந்தரமென்றும், ஸ்தாயிமார்க்கங்களென்றும் உள்ள பேதங்கள் அன்றி மொத்தம் இராகங்கள் 72,00,012 என்றும் மேலே சொல்லப்பட்ட பேதங்களையும் அடிஸ்தானப்படுத்தினால் இராகங்களின் தொகை இன்னும் அனந்தமென்றும் ஓர் அபிப்பிராயமு முண்டு.

எப்படியாயினும் அனந்தமான இந்த சங்கீத சாஸ்திரம் கற்பது மிகக் கடினமே யாகும். மேல் சொல்லப்பட்ட எல்லா இராகங்களையும் தெரிந்து கொண்டவர்களுமில்லை. நித்திய உபயோகத்திற்கான சிலவற்றை மாத்திரம் மிக்கவாறு கற்றுக்கொள்கின்றனர். அச்சிலவற்றாலே தாராளமாக சங்கீத காலத்தை நிர்வகித்தும் கொள்கின்றனர்.

# நிலமெங்கும் நலமுண்டு

பி. எஸ். துப்புசாமி, பி.ஏ., (ஆனர்ஸ்)

நீலக் கடலாடை தரித்த இப்பரந்த புவியில்வாழும் மனிதர்கள் எத்தனை கோடியுளர்! அவர்களிடை வழங்கிவரும் ஜாதிமதப் பாகுபாடுகள் எத்தனை ஆயிரம்! அவர்களுடைய வாழ்க்கையில் காணப்படும் விசித்திர விநோதங்களோ எண்ணில் அடங்கா! பற்பல தேசத்தவர்களுடைய நடையுடை பாவனைகளிலும் குணாதிசயங்களிலும் உள்ள வேறுபாடுகளோ, எண்ணுந்தோறும் விரிதலால் முடிவு காணவொண்ணாத தன்மையனவாயுள. எனினும் கோடிக்கணக்கிலும் கோடிகாண வியலாது விகற்பித்துக் காட்டும் மானிட இயற்கையை சற்றே நடுவு நிலைமை பிறழாத மனதுடன் ஆராய்ந்தால், நாம் ஓர் மகத்தான உண்மையை உணர்கின்றோம். சிற்சில அம்சங்களில் வித்தியாசங்கள் தோன்றியபோதிலும், மனிதர்கள் எல்லோரும் பெரும்பாலும் அநேக அம்சங்களில் ஒத்திருக்கின்றார்கள் என்பதை உன்னும்போதெல்லாம் நமது மனதில் இன்ப உணர்ச்சியே எழுகின்றது.

நாம் பிறதேசத்தவர்களைக் காணும்பொழுதும், அவர்களைப்பற்றிக் கேள்விப்படும்பொழுதும் நமக்கும் அவர்களுக்கும் இடையில் உள்ள வித்தியாஸங்களைத் தான் முதல் முதலில் உணர்கிறோம். இது மிகவும் சகஜமா யிருக்கிறது. ஆனால் மானிட சமூகத்தின் பொது நலத்தையே எக்காலும் தமது நெஞ்சில் பாராட்டும் அருளுடையோர் பல மனிதர்களும் எங்கெந்த விஷயங்களில் ஒத்திருக்கின்றார்கள் என்பதை உணரவே முயற்சிப்பார்கள். இச் சிறந்த மனப்பான்மையின் மகிமை யாவரும் அறிதல் அவசியம். ஏனெனில் குறித்ததோர் நிலைமையில் பெரும்பாலும் எல்லா மனிதர்களும் ஒரேமாதிரி நடந்து கொள்வதும், இன்பத்தையோ, துன்பத்தையோ, சுகத்தையோ, கஷ்டத்தையோ பயக்கும் சம்பவங்கள் எல்லா மனிதரையும் சமமாகவே பாதிக்கிறது என்பதும் நாம் கண்கூடாகக் கண்டதன்றோ!

மேற்கண்ட விஷயங்களை உய்த்துணர்தல் ஜகமெங்கும் ஸமாதானம் நிலைபெறுவதற்கு இன்றியமையாதது. எல்லாத் தேசத்தவர்களும் அந்நிய

---

நீ படிக்கத் தீர்மானிப்பதின் அளவை உன் அவகாசத்திற்கும் அவாவிற்கும் தக்கபடி வரையறுத்துக் கொள். ஆனால் நீ படிப்பதின் அளவு சிறிதாயினும் சரி, பெரிதாயினும் சரி—நீ படிப்பது மட்டும் பலதிறப்பட்டதாயும் ஒன்றிற் கொன்று அதிக வேறுபாடுடையதாயு மிருக்கட்டும். ஒரே வகையான நூல்களைமட்டுமே படிப்பவன் எவ்வளவு ஆழமாய்ப் படித்தாலும் சரி, அநேகமாய் நிச்சயம் தாறுமாறாய்விடக்கூடிய அபிப்பிராயங்களையும், குறுகியதாய் மட்டு மில்லாமல் பொய்யாயுமுள்ள அபிப்பிராயங்களையுமே பெறுவான். மக்கள் அறிவுவளர்ச்சி சம்பந்தமாய் எனக்கு ஏதேனும் ஒரு அம்சத்தில் திடமான அபிப்பிராயம் இருக்குமானால் அது இதுவே.

நாட்டார்களையெல்லாம் தம்மைப்போலவே சுக துக்கங்களுக் காளாகி, பற் பல மனோ சக்திகளும் வாய்க்கப்பெற்று உயிர்வாழும் மனிதர்களின் தனித் தனிப் பகுதிகள் என்று எண்ணும் மனப்பான்மை உலகில் நிலைபெற்றுவிட் டால் புவியெங்கும் சாந்தம் பூரண உருவோடும் ஒளியோடும் திகழாதிருக் குமோ?

சில தீர்க்கதரிசிகள் இனி வருங்காலத்தில் ஒவ்வொரு தேசத்திலுள்ள சிறுவர்களும் சிறுமிகளும் பல அந்நிய நாடுகளுக்குச் சென்று கல்விப்பயிற்சி பெறவேண்டிய பிரமேயம் ஏற்படக் கூடும் என்று கூறுகிறார்கள். இவ் வகைப் பயிற்சி மாணவர்களுக்கு பிறநாடுகளைப்பற்றிய அறிவை அநுபவ முறை யில் போதித்து அவர்களது மனது விரிந்து விசாலமான கொள்கைகளையே நாடி நிற்கச் செய்யுமன்றோ! இவ்விதம் மருளற்றுத் தெளிவு செறிந்த காலம் வருமுன், ஒவ்வொரு நாட்டாரும் அவரவர் தேசத்தில் கையாண்டு வரும் போதனா முறைகளில் சில நூதன சீர் திருத்தங்களைச் செய்வது நல்லது. விசேஷமாக மாணவர்களுடைய தேசசரித்திர பாட புத்தகங்களைச் சீர்திருத் துவது நல்ல அடிகோலி வைப்பதாகும்.

ஒவ்வொரு தேசத்திலும் கற்பிக்கப்படும் தேச சரித்திரங்களில் பெரும் பாலும் உண்மையானது மறைந்தும் விகற்பித்தும் காணப்படுகிறது. கடந் தகாலத்தில் நிகழ்ந்த சம்பவங்களில் முக்கியமானவைகளில் உண்மை நட வடிக்கைகள் இன்னவையென்று இச் சரித்திரங்களினின்றும் காண்பதரிது. வாடர்லூ (Waterloo) யுத்தத்தில் பிரெஞ்சு சக்கிரவர்த்தியான நெபோலி யனை முறியடித்தது இரண்டு ஜர்மானிய தளகர்த்தரே என்று ஜர்மானியர் பயி லும் தேச சரித்திரங்கள் போதிக்கின்றன. அதே யுத்தத்தைப் பற்றி எழுதும் ஆங்கிலேய சரித்திர ஆசிரியர்கள் வாடர்லூ வெற்றியை தமது தளகர்த்தரான வெல்லிங்டனுடைய ஒப்பற்ற போர்த் திறமைக்கும் ஆங்கிலேயருடைய வீரத் திற்கும் எடுத்துக் காட்டாக விளங்கும் தனிச் சிறப்பு வாய்ந்த சின்னமாகப் புகழ்ந்துகொண்டாடுகிறார்கள். இந்தியாவில் நடந்த சிபாய்க் கலகத்தைப் பற்றி எழுதும் ஆங்கில சரித்திர நூலாசிரியர்கள் ஆங்கிலேயர் நீதிதவறாது நடந்துகொண்டதாகவும் இந்தியர்களே இகழத்தக்க அட்டூழியங்களைச் செய் தவரென்றும் நிரூபணம் செய்கிறார்கள். அக்கலகத்தைப்பற்றிய நடவடிக்கை களை ஆராய்ச்சி செய்த இந்தியர் ஆங்கிலேயரும் நீதி நெறிவழுவி அநேக கொடு மைகளைச் செய்ததாகக் கூறுகிறார்கள். எனவே ஒரே சம்பவத்தை வர்ணிக் கும் பல தேச சரிதங்கள் நம்மை ஐயப்பாடுகளில் மயக்குகின்றன. தமது தாய்நாட்டை அபரிமிதமாகப் பெருமைப்படுத்திப் பேசுவதும் பிறதேசத்தின் சிறப்பைச் சிறுமைப்படுத்தி அவைகளிடத்து வெறுப்பூட்டுவதும் தற்கால தேச சரித்திர நூல்களின் இயல்பாக இருப்பது வெளிப்படையான உண்மை.

இப்போதனைகள் மாணவர் மனதில் பல தீங்குகளை விளைக்கின்றன. அவர்கள் தமது தேசம் பிறதேசங்களை அடக்கி ஆள விசேஷ உரிமை பெற்

---

ஆடையில் ஒரு முறை ஒரு கிழிவு ஏற்பட்டுவிட்டால் அதை ஒவ்வொரு ஆணியும் ஒவ்வொரு முட்செடியும் கிழித்துக் கொண்டேயிருக்கும் ஒருமுறை கீறிய கண்ணாடி சீக்கிரம் உடைந்துபோகும். மனிதனுடைய நற்பெயரும் அவை போன்றதே. அதிலும் நியாயமான வகையால் உண்டாகும் மாசு ஒரு முறை ஏற்பட்டுவிட்டால் போதும், அது சீக்கிரம் அழிந்துவிடுவது நிச்சயம்.

திருப்பதாக எண்ணுவார்கள். தமது தேசத்தின் சுபிக்ஷத்தைக் கோரியே உலகம் படைக்கப்பட்டிருப்பதுபோன்ற பாவனை அவர்கள் மனதில் உருக் கொள்ளும். தமது தேசத்தவரும், அவரது செய்கைகளும், தமது தேசத்தில் விளையும் விளைபொருள்களும் உலகிலேயே நிகரற்று நிற்கும் சீருடையன வென்று செருக்குக் கொள்வார்கள். பிறநாட்டாருடைய எளிய நிலைமையைக் கண்டு தாம் அநுதாபம் காட்டுவதே தாம் அவர்களுக்குச் செய்யும் பேருதவி என்ற கருத்துத் தோன்றி அவர்களிடம் மமதையை வளர்க்கும்.

இவ்விதமான வரம்புகடந்த சுயமதிப்பு ஸமாதான உடன்படிக்கைகளில் ஸம்பந்தப்படும் கக்ஷியினருடைய உள் கருத்தில் நின்று ஸமாதான உணர்ச் சிக்கே கேடு விளைக்கும் சம்பவங்களை சரித்திரத்தில் காணலாம். உதாரண மாக காங்கிரஸ் உடன் ஸமாதானம் செய்துகொள்ள இந்திய அரசாங்கத்தார் ஒப்புக்கொள்ளச் சம்மதித்த நிபந்தனைகளை எடுத்துக்காட்டலாம். அவை களிலிருந்து இந்திய அரசாங்கத்தார் தமது சுயமதிப்பையே பெரிதாகக் கரு தினர்கள் என்றுணரலாம். தமது மதிப்பே பிறர் மதிப்பினும் மாணப் பெரி தென்று நினைக்கும் மனப்பான்மை எவ்வித ஸமரஸ உணர்ச்சிக்கும் முற்றி லும் விரோதமானது. இம் மனப்பான்மையினலன்றோ நமது நாட்டில் சென்ற ஆண்டில் தண்டப்பிரயோகங்களும், சிறைவாஸ தண்டனைகளும் அநேகருக்கு சம்பவித்தன !

வையக முழுதும் சாந்தம் என்னும் முழு மதி விளங்கி அன்பும் அருளு மாகிய தண்ணிலாவை விரிக்க வேண்டுமென்ற விழைவு எவரெவர் நெஞ்சத் தில் ஓங்காரமாக நிற்கிறதோ அவர்களெல்லாரும் மனிதர்க்கு நிலமெங்கும் நல முண்டென்றும், நல்லோர் எத்தேசத்தவராயினும் போற்றத்தக்கவரென்றும் வற்புறுத்தவேண்டும். பிறநாட்டாரிடம் காணப்படும் வேற்றுமைகளைக் கண்டு அவர்களிடம் வெறுப்பையோ பகைமையையோ காட்டாது அவர்க ளிடம் பரஸ்பர நட்பும், அன்பும், மரியாதையும் காண்பித்துப் பழகவேண் டும். மனிதர்களிடையே காணப்படும் வேற்றுமைகள் ஒருவரை யொருவர் விரும்பி நேசிக்கவும், பரஸ்பர வாஞ்சையினல் மானிட சமூகத்தின் பெருமை யும் இன்பமும் ஓங்கித் தழைத்து, வாழ்க்கையில் கைப்பின்றி இனிப்பும், ரம் மியமும், ரஸிகமும் மல்கவே ஈசுவரனல் ஏற்படுத்தப்பட்டனவன்றோ !

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நெம்பர் தெரியாத வர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த் துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

---

இழிஞன் ஏராளமாய்ப் பணம் படைத்திருப்பது இறைவன் ஒழுங்கு முறைக்கு இழுக்கன்றோ? இம்மியும் இழுக்கன்று. இழிஞன் அந்த லட்சியத் திற்காகவே தன்னை இழிஞனக்கிக் கொண்டான். அவன் அதற்காகத் தன் ஆரோக்கியம், மனச்சான்று, சுதந்தரம் எல்லாம் இழந்துளான். அவற்றைக் கொடுத்து அவன் வாங்கிக் கொண்டதற்காக நாம் பொறாமைப்படலாமோ?



# மேனாட்டுத் தத்துவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

(340-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஹியூம் என்பவர் உலகத்தையும் அனுபவத்தையும் சின்னாபின்னப்படுத்திவிட்டார். ஞானமென்பதே முடியாத விஷயம். நாம் பார்ப்பது, கேட்பது முதலியன தனித்தனி அங்கங்கள். ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் அவ்வப்போது உதிப்பது. உடனே மறைந்துவிடுவது. நமது அனுபவம் விறகுக் கட்டைகள்போல் கட்டப்பட்டதே தவிர ஒற்றுமையுள்ளதில்லை என்று அவர் கருதினார்.

காண்ட் என்பவர் ஹியூம் சொல்வது வாஸ்தவந்தான் என்றார். அனுபவம் நாம் கண்களால், செவிகளால், ஸ்பரிசத்தால், மோப்பத்தால் அல்லது நாக்கினால் அடையக்கூடுமே யல்லாது வேறு வழியில் பெறமுடியாது. ஒவ்வொரு தோற்றமும், ஒவ்வொரு ஒலியும், ஒவ்வொரு வஸ்துவும், ஒவ்வொரு வாசனையும், ரஸமும் தனிப்பொருளே யல்லாது சம்பந்தமுள்ளதல்ல. ஆயினும் இந்தக் காரணத்தினாலேயே நமது அனுபவம் சம்பந்தமற்றதெனச் சொல்லிவிடலாமா? நான் எழுதுகோலைப் பிடித்திருக்கிறேன். கையைக் காகிதத்தின்மேல் ஊன்றி சில சைகைகள் செய்கிறேன். சிறிது நேரத்தில் காகிதத்தின்மேல் எழுத்துக்கள் தோன்றுகின்றன. இங்கே மூன்று தனித் தோற்றங்கள் இருக்கின்றன. பேனாவைப்பற்றியிருப்பது. காகிதத்தின்மேல் கையை ஓட்டுவது. மூன்றாவது எழுத்துக்கள் இருப்பது. இம்மூன்றுக்கும் சம்பந்தமில்லையா? எழுத்து எப்படி வந்தது? நான் எழுதினதால். நான் எழுதுவது எழுத்துக்கள் தோன்றுவதோடு சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமல்லவா?

ஹியூம் இதை ஒத்துக்கொள்வார். இருக்கட்டும். இப்போது எழுதிய காகிதத்தை நான் பார்க்கிறேன். நான் எழுதவில்லை. எழுதியதையும் பார்க்கவில்லை. ஆயினும் எழுத்துக்களை யாராவது எழுதியிருக்க வேண்டுமென ஊஹித்துக் கொள்ளலா மல்லவா? ஹியூம் "இது தவறு. இன்னொருவன் எழுதியதை நீ பார்க்காத மட்டில் நீ எப்படி இன்னொருவன் எழுதியிருக்க வேண்டும் எனலாம்?" என்பார். காண்ட் இதற்குச் சமாதானமாக "அது தான் மனிதனின் வேலை. அனுபவமென்பது அவ்வப்போது ஆரம்பித்து முடிந்துபோகும் விஷயமல்ல. ஒன்றை நன்றாய் அறிந்த பிறகு மறுபடியும் அதைப் பார்க்குமளவிலேயே தெரிந்து கொள்ளலாம். மனம் பெறும் அனு

---

புனிதமான விஷயங்களை உணர்ச்சியின்றிக் கையாளும் வேஷதாரிகளே பெரிய நாஸ்திகர். அவர்களுக்கு இறுதியில் சூடுபோடுதல் அவசியம்.

பவத்தைச் சும்மா பார்த்துக்கொண்டிருக்காமல் அதன் சாராம்சத்தைக் கிரஹித்து பின்னால் உண்டாகும் அனுபவத்தை யடைகிறது. ஒரு மனிதனைப் பார்க்கிறோம். அவன் நமது சிநேகிதன் என்று தெரிந்து கொள்கிறோம். ஆனால் ஒவ்வொரு முறையும் அவனை அன்னியனாகக் கருதிச் சிநேகம் பிடிக்க எண்ணினோமானால் நமது ஆயுட்காலம் போதாது. இரவு படுத்துக் கொள்கிறோம். காலையில் எழுந்திருப்பது நாமில்லாமல் வேறு யாராவதாக மாறிவிட்டால் அப்புறம் உலகத்தில் வசிப்பதெப்படி? முதலாவது நாம் மாறிவிட்டோமென்பது எப்படித்தெரிகிறது. வாஸ்தவமாக மாறிவிட்டிருந்தால் நாம் மாறியதை அறிந்திருக்க முடியாது. நேற்றைய ஞாபகம் கொஞ்சமேனு மிருந்தால்தான் வித்தியாசம் வெளிப்படையாகும். ஆகவே மாறுவதாக யிருந்தாலும் நமக்கும் நேற்று நாமாக இருந்த மனிதனுக்கும் அவசியம் சம்பந்தமிருத்தல்வேண்டும். அதாவது அனுபவம் மாறிக்கொண்டே யிருந்தாலும், சில விஷயங்கள் மாறாமலிருக்கின்றன. இம்மாறா விஷயங்கள் கண்களுக்குப் புலப்படாமலிருந்தாலும் அவை இருக்கின்றன வென்பதில் சந்தேகமில்லை. இவை இருக்கின்றனவென்றால் ஆகிருதிகொண்டு எங்கோ ஓரிடத்தில் தங்கியிருக்கின்றன வென்று அர்த்தமில்லை. இருப்பு என்றால் உருவத்தோடு இருப்பென்பது தப்பு தத்துவம். உருவத்தோடு இருக்கும் பொருள்களையே நாம் அறியக்கூடும். ஆயினும் அனுபவத்தில் மனம் உருவமற்ற அழிவில்லாத, நிரந்தர உண்மைகளை ஊஹித்தறிகிறது. ஒரு மனிதன் நுனி மரத்திினின்றும் அடி மரத்தை வெட்டுகிறான். நாம் அவனை "அடே, முட்டாள்! கீழே விழுவாய்!" என்கிறோம். ஏன்? முன்னொரு முறை அவன் விழுந்ததை நாம் பார்த்திருக்கிறோமா? அல்லது நாம் அவ்வாறு செய்து விழுந்திருக்கிறோமா? அன்று. சில விஷயங்களிலிருந்து நாம் பொதுவாக இதுபோன்ற காரியங்களைச் செய்தால் இப்படி யிப்படி யாகுமென ஊஹித்தறிகிறோம். இதைக்கொண்டே நாம் புத்திமதி சொல்ல இயல்கிறது. ஏன்? இந்த மனிதன் ஒருகால் விழாமல் நுனி மரத்திலேயே நின்றிருந்தால்? அப்படியாகாது. இவன் விழுந்தேதீருவான்.

மனம் ஊகித்துக் கொள்ளும் சக்திவாய்ந்தது. ஊகிப்பதெனில் கான்ட் மனம் அச்சுப்போன்ற சில சட்டங்களை ஏற்படுத்திக் கொள்ளுகிறதெனலாமென்றார். மண்ணை எடுத்து உருவமாகச் செய்ய அச்சு தயாராய் வைப்பது போல் மனமானது அச்சு அல்லது சட்டமெனச் சொல்லக்கூடிய சில விதிகளை ஸ்தாபித்துக் கொள்கிறது. அனுபவமாகிய மண் இச் சட்டத்திற்குள் புகுந்து நமக்கு ஞானத்தைக் கொடுக்கிறது. ஹியூமைப்போல் கான்ட்டும் ஞானம் அனுபவத்தாலன்றி அடையமுடியாதென்று அறிந்தார். ஆனால் ஹியூம் அதோடு நின்றுவிட்டார். கான்ட் அனுபவத்தை மனம் புலன்களால் மாத்திரமல்ல ஊஹித்தும் அறிகிறதென்றார். மனம் ஞானத்தை அடைகிறது. இம்மனம் மாறுவதில்லையா? மனமும் மாறும். அனுபவ மதிகமாக அதிகமாக மனம் மாறித்தான் ஆகும். ஆயினும் மாறுதலிலும் நித்தியத்துவ மிருக்கவேண்டுமெனக் கூறப்பட்டது. இந் நித்தியத்துவம் யாருடைய அம்சம்? 'நான்' என்று நம்மைப்பற்றிச் சொல்லிக் கொள்கிறோமே அதுவே நித்தியம். 'நான்' என்றும் சாஸ்வதம். எவ்வளவு மாறுதலிருந்தபோதிலும் 'நான்' இருக்கும். 'நானும்' என்னைப் போன்ற ஏனைய மனங்களும் ஒரே உலகத்தை யறிவதால்

---

நாம் பிறந்தவுடன் அழுகிறோம்—முட்டாள்களின் இந்தப் பெரிய நாடகமேடைக்கு வந்துவிட்டோம் என்று.

எல்லா மனங்களும் ஒரே மாதிரியா யிருக்கின்றன. எனக்கு உண்மையானது வேறொருவனுக்குப் பொய்யா யிராது. அப்படியிருப்பின் இருவரில் ஒருவர் அபிப்பிராயம் தவறாக இருக்கவேண்டும்.

இன்னொன்று. நாம் அனுபவிக்கும் உலகம் அநித்தியமானது. கண்ணை விழித்து இமைகொட்டுவதற்குள் மாறிவிடுகிறது. சென்ற க்ஷணத்திற்கு இப்போது நான் சிறிது மாறிவிட்டேன். இந்த சாஸ்வதமற்ற உலகமா நமக்கு உண்மை ஞானந் தரக்கூடியது? கான்ட் 'இல்லை' யென்றார். இந்த உலகம் தோற்றம், மாயை என்று அவர் அபிப்பிராயப்பட்டார். நாம் காணமுடியாத சாஸ்வத உலகமொன்று இருக்கிறது. அதன் உருவமே நாம் அனுபவத்தில் காண்கிறோம்: அந்த உலகத்தை நாம் பார்க்கவே முடியாது. நம்முடைய கண்கள் சூரியனைக் காணமுடியாதல்லவா? அதுபோல் அந்த உலகத்தைப் பார்த்தால் நமது மனம் கூசும். ஆகையால் நமது அவயவங்கள் கிரஹிக்கக்கூடியபடி ஒரு தோற்றமிருக்கிறது. இதுவே நம்முடைய உலகம். அதற்கு அவர் பெனுமினன் (Phenomenon) என்றும், நித்தியமான உலகத்திற்கு நூமினன் (Noumenon) என்றும் பெயரிட்டார்.

சாதாரணமாக நாம் கடவுள் ஒருவர் இருக்கிறாரென நினைக்கிறோம். இதற்கு ஆதாரம் என்ன? நாம் அவரைக் கண்ணால் பார்க்கிறோமா? அவர் பேசுவதைக் கேட்கிறோமா? இல்லை. நமது அனுபவம் தோற்றத்தாலல்லவா ஏற்படுகிறது. இத்தோற்றத்தில் ஒரு விஷயம் இல்லையெனில், அவ் விஷயமேயில்லையெனச் சொல்வது தவறாகாது. ஆகவே கடவுள் இல்லையெனில் பொருந்தும். கான்ட் இப்படியே சொல்கிறார். கடவுளை நிரூபிக்க மனத்தால் முடியாது. ஆனால் இத்தனைபேர் மனதில் கடவுள் என்ற எண்ணம் குடிகொண்டிருக்கிறதே. அதன் காரணமென்ன? இது என்ன பித்தமா? அன்று. மனம் கடவுளை யோசனையால் நிரூபிக்க முடியாததால் யோசனையன்றி இன்னொன்று இருக்கவேண்டு மென்று ஏற்படுகிறது. இது நம்பிக்கை. கடவுள் இருக்கிறாரென்று நாம் நம்புகிறோம். கான்ட் இதைப் புது மாதிரியாக நிரூபிக்கிறார்.

உலகத்தில் மிகப்பெரிய மிக அரிய வஸ்து எது? நல்ல மனம். நல்ல மனமென்றால் என்ன? சுயநலமே கிஞ்சித்தும் பாராட்டாத மனமே நல்ல மனம். ஒருவன் பெரிய பணக்காரன்' தன்னுடைய பணத்தை ஏழைகளுக்குக் கொடுக்கிறான். இது நல்ல மனமாகுமா? ஆகாது. பரம ஏழையாயிருக்கிறான். இரவு போஜனமெங்கேயெனத் தெரியாது. கட்டுச்சாதம் கையில் வைத்திருக்கும்போது இன்னொருவன் கேட்கக், கொடுத்துவிடுகிறான். இதுவே நல்ல மனது. அப்படித்தான் கொடுக்கச் சக்தியில்லை. கொடுக்க வேண்டுமென எண்ணமிருந்தாலும் போதும். அதவும் நல்ல மனமே. ஒரு மனிதன் சதா பிணியால் வருந்துகிறான். அவனுக்கு நடக்கவும் சக்தியில்லை. அவன் கண்ணெதிரே ஒரு குழந்தை குளத்தில் விழுந்துவிடுகிறது. அதை எடுக்கப் போக முடியவில்லை. இருப்பினும் அதை எடுக்க வேண்டுமென எண்ணங் கொண்டதே நல்ல மனத்திற்கு அறிகுறி. இந்த நல்ல மனம் ஸ்வயமாகப் பிரகாசிக்கும் ரத்னத்தைப் போன்றது. என்? ஒரு தூண்டுகோலுமில்லாமல் தானாகவே ஒவ்வொரு காரியத்தையும் செய்கிறது. ஒரு வியாபாரி சாமான்களை நியாயமாகவே விற்கிறான், பெரியவனாயினும் சரி குழந்தையாயினும்

---

என் மானம் போய்விட்டால் நானே போய்விட்டேன்!

சரி எல்லோருக்கும் ஒரேமாதிரி சரக்குகளைக் கொடுக்கிறான். ஆயினும் இவனுக்கு நல்ல மனதென்று சொல்ல முடியாது. ஒருகால் இப்படிச் செய்தால் தான் வியாபாரம் சீராக நடக்குமென எண்ணியிருந்தாலோ? அவன் யதார்த்தமாகவே லாபம் வரினும் நஷ்டம் வரினும் நியாயத்திற்குக் கட்டுப்படவேண்டும் என்று உள் மனதோடு செய்தால்தான் நல்ல மனதுடையவனெனலாம்.

இப்படிப்பட்ட ஸ்வயம்பிரகாசமான நல்ல மனம் வேறொன்றிற்கும் கட்டுப்பட்டதல்ல. தானே சில விதிகளை ஏற்படுத்திக் கொண்டு அதன்படி நடப்பதால் அதற்குப் பரிபூர்ண சுயராஜ்ய மிருக்கிறது. கான்டின் தத்துவத்தில் முக்கியமான பதம் 'கடமை.' இக்கடமை வேறொருவர் கட்டாயத்திற்காக இல்லை. மனம் தன்னுடைய ஆட்சிக்கே கட்டுப்பட்டுத் தான் சரியாக நடக்க வேண்டுமெனத் தானே ஒருவர் ஏவலின்றி ஒரு காரணத்தை உத்தேசித்ததாக இல்லாமல் அறிந்து கடமைகளை விதித்துக்கொண்டு அதன்படி நடக்கிறது. இப்படிப்பட்ட நல்ல மனம் இந்த அநித்திய உலகவாசியாக இருக்கக் கூடுமா? முடியாது. அது அந்த சாஸ்வத உலகத்தின் வாசியே. இது ஒரு மனம் மாத்திரமல்ல. அனேக மனங்கள் அங்கிருக்கின்றன. ஒவ்வொன்றும் தன்னுடைய ஆட்சிக்கே கட்டுப்பட்டது. ஆயினும் கடமை ஒரே விதமானதால் எல்லா மனங்களும் ஒருவிதத்தில் இந்தக் கடமைக்கு அடிமைகள் எனலாம். இந்த திவ்ய உலகத்தைச் சரிவர நடத்தக் கடவுளிருக்க வேண்டும். கடவுள் சித்ஸ்வரூபி. அவருக்கு இந்த மாய உலகில் சம்பந்தங் கிடையாது. மனிதராகிய நாம் இரு வுலகங்களிலும் சம்பந்தமடைந்திருக்கிறோம். அவர் அப்படியன்று. ஆகையால் இவ்வுலகத்தின் விஷயங்களைக் கொண்டு அவர் இருக்கிறாரென்றாவது இல்லையென்றாவது ரூபிக்கக்கூடாது. சில ரஸாயன நிபுணர்கள் இவ்வுலகத்தின் அதாவது இயற்கைப் பொருள்களைக் கொண்டே விஷயங்களின் தாத்பரியத்தை அறியலாமென்றும் கடவுள் அவசியமில்லையென்றும் வாதிக்கிறார்கள். கான்ட் இவ்வாதம் சுத்த தவறு என்றார்.



துன்பமே மனிதனுடைய உண்மையான கட்டளைக்கல்.

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

"அப்பா! பக்கத்து வீட்டில் என்ன விசேஷம்? அதிக சத்த மிட்டு அழுதுகொண் டிருக்கிறார்களே! அவர்களுடைய தகப்பனார் ஏதாவது தின்பண்டம் கேட்டதற்கு வாங்கித் தரமுடியா தென்றரா?" என்று நான்கு வயதுள்ள சிறுவன் தன் தகப்பனாரைக் கேட்டான்.

தகப்பனார்:—இல்லை. இல்லை. அண்டை வீட்டு மாமா இறந்துபோய் விட்டார். அதற்காக அழுகிறார்கள்.

பையன்:—இறந்துவிட்டால் அழுவானேன்?

தகப்பனார்:—இறந்துவிட்டால் திரும்பி வரமாட்டாரல்லவா? அவ் வீட்டுப் பிள்ளைகள் யாரை அப்பாவென் றழைப்பார்கள்?

பையன்:—இறப்பதென்றால் என்ன?

தகப்பன்:—நம்மைப்போல் இறந்தவர் ஓடியாட முடியாது. அவர்கள் உலகத்தில் நடப்பதை யறியார்கள். அவர்கள் தமது தேகங்களை விட்டுப் பிரிந்து போகிறார்கள்.

பையன்:—அவர்கள் போனால் இருப்பவர் அழுவானேன்?

தகப்பன்:—அவர்களை இனிமேல் பார்க்கமுடியாது, அவர்களோடு பேச முடியாது, சந்தோஷமாய் இருக்கமுடியாது, பின்னும் அவர்களோடு நடந்த சம்பவங்கள் ஞாபகம்வரும். அவர்கள் இல்லாவிட்டால் வேண்டிய வஸ்துக்கள் கிடைக்கா. இவை யெல்லாம் நினைத்துக்கொண்டு அழுகிறார்கள்.

பையன்:—ஏன் மாமா இறக்கவேண்டும்? இத்தனை பேர் அழும்போது அவர் இறக்கக் காரணமென்ன?

தகப்பன்:—மனிதன் என்று பிறந்துவிட்டால் இறப்பது நிச்சயம்.

பையன்:—அப்படியானால் நாமெல்லோரும்கூட இறக்க வேண்டுமோ?

தகப்பன்—ஆம்.

பையன்:—நீயும் இறந்து விடுவாயோ?

தகப்பன்:—ஆம்.

பையன்:—என்றைக்கு?

தகப்பன்:—(சிரித்து) என்றைக்கு என்று சொல்லமுடியாது. என்றைக்காவது இறந்தே தீரவேண்டும்.

---

ஜனசமூகம்!—எத்தனை மூடர் சேர்ந்து ஒரு ஜனசமூகம்!

பையன்:—அப்போது நமது வீட்டில்கூட அழுகை யிருக்குமே!

தகப்பன்:—அதற்கென்ன செய்வது?

பையன்:—நாங்கள் இப்போது அழுதால் சமாதானப்படுத்துகிறுயே. நீ இறந்தால் நாங்கள் அழுதோமானுல் உனக்குச் சம்மதமா யிருக்குமா?

தகப்பன்:—நான் இறந்துவிட்டால் மற்றவர் அழுவது எனக்கு எப்படி யடா தெரியும்?

பையன்—இப்போது பக்கத்து வீட்டில் அழுகிறுர்களே. இதைப் பார்த்து இப்படித்தா னிருக்குமென்று தெரிந்துகொள்ள முடியாதா? எங்களுக்கு வேண்டியதெல்லாம் இப்போதே வாங்கிக் கொடுத்துவிடு. அப்போது நாங்கள் அழமாட்டோம்.

தகப்பன்.—அப்படியெல்லாம் எது வேண்டும் எது வேண்டாமென்று இப்போது எப்படித் தெரியும்?

பையன்:—என்னப்பா! இவ்வளவு தெரியாதா. நாங்கள் எது வேண்டுமென்போம் என்று தெரியாமலா இத்தனை தினங்கள் பழகியிருக்கிறுய்?

தகப்பன்:—என்னவேண்டி யிருக்கும், சொல் பார்ப்போம்.

பையன்:—எனக்குப் பொம்மைகள் வேண்டும், பலூன்கள் வேண்டும், தீபாவளிக்குப் படாஸ் வேண்டும், புதிய வேஷ்டிகள் சொக்காய்கள் வேண்டும், தின்பண்டங்கள் வேண்டும்.

தகப்பனுர்:—என்றைக்குமா விளையாடிக்கொண் டிருக்கப்போகிறுய்? படிக்கவேண்டாமா?

பையன்:—அதைத்தான் சொல்லுகிறேன். புஸ்தகங்களும் வேண்டியிருக்கும். அக்காவுக்கும் இதைப்போல் துணிகள் முதலியன வேண்டி யிருக்கும். மேலும் நாங்கள் சாப்பிட வேண்டுமே. நீ போய்விட்டால் எங்களுக்கு எப்படிச் சாப்பாடு கிடைக்கும்?

தகப்பனுர்:—ஏன் கிடைக்காது? கடவுள் கொடுக்கிறுர்.

பையன்:—கடவுள் கொடுப்பதாயிருந்தால் தகப்பனுர் இறந்ததற்கு அழுவானேன்? எப்படியிருந்தாலும் கடவுளிருக்கிறுர் என்று சும்மா இருந்துவிடலாமே?

தகப்பனுர்:—அப்படி யிருக்க முடியாதடா. தகப்பனுர்தானே இது வரையில் எல்லாம் வாங்கிக் கொடுத்து வந்தார். அவர் இல்லாவிட்டால் கஷ்டந்தானே. அதற்காகத்தான் அழுகிறுர்கள். நீ ஒரு பொம்மை உடைந்து விட்டால் அழுகிறுயல்லவா? எப்படி யிருந்தாலும் இன்னொரு பொம்மை கிடைக்குமெனத் தெரியுமே, ஏன் அழுகிறுய்?

பையன்:—எனக்காவது இன்னொரு பொம்மைவரும். இன்னொரு தகப்பனுர் வருவாரா? அதனுல்தான் இப்போதே எல்லாவற்றையும் வாங்கிக் கொடுத்துவிடு. நான் சொல்லிவிட்டேனே என்ன வேண்டுமென்று. உனக்கே தெரியும் இன்னும் என்னென்ன தேவையா யிருக்குமென்று.

---

ஐயோ! பேயை அடக்குவதினும் எழுப்புவது எளிது.

தகப்பனார்:—இதற்கெல்லாம் எவ்வளவு பணம் தேவை யென்று எப்படி யடா தெரியும்?

பையன்:—அது உனக்குத் தெரியாதா? இல்லை, அதைச் சேர்த்துக் கொடுக்கத் தெரியாதா? வேண்டுமென்றால் எல்லாம் செய்யலாம்.

* * *

அன்பர்களே! இக்காலத்தில் குழந்தைகளுக்கு வெகு சீக்கிரத்தில் உலக அனுபவம் ஏற்படுகிறது. அவர்களுக்கு புத்தி நுட்பமும் அதிகம். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்வதுகூட நமக்குக் கடினமாய் விடுகிறது. கடினமா யிருப்பதால் நாம் சில சமயங்களில் உதாசீனமாய்ப் பதில் சொல்லி அவர்களை அடக்கப் பார்க்கிறோம். இது தவறு. அவர்களுடைய மழலைச் சொல்லிலும் ரத்னங்க ளிருக்கக் கூடும். சிறுவர்கள் புத்தி விசால மடைந்தால் உலகத்திற்கு எவ்வளவு நன்மை யுண்டாகும். ஒரு மனிதன் அதிக புத்திசாலியா யிருப்பின் உலக முழுவதும் அதனால் சந்தோஷமடையும். தற்காலம் வழங்கிவரும் ஒவ்வொரு விஷயமும் முதலில் ஒரு மனிதன் மூளையிலேயே உற்பத்தியாயிற்று. ஆகையால் ஒவ்வொரு மூளையும் விருத்தியடைவதற்குவேண்டிய சாதனங்கள் நம்மாலியன்றவரையில் புரிய வேண்டும். இதற்கு நமக்குச் சக்தியுள்ள வரையில் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் கல்வி கற்பிக்கவேண்டும். கல்வி மாத்திரம் போதாது. கல்வியைக் கிரஹித்துக்கொள்ள மற்ற வசதிகள்—நல்ல உணவு, நல்ல உடை, பணக் கஷ்டமின்மை—முதலியவை ஏற்படுத்தவேண்டும். இதற்குத் தக்கமுறை இன்ஷியூரென்ஸ்தான்.

* * *

## தெய்வ பக்தி

தெய்வத்தினிடத்தில் பக்தி எல்லோருக்கும் உண்டு. இருப்பது அவசியம். ஆனால் பக்தி யென்றால் சிலர் வேறொன்றும் அவசியமில்லை யென நினைக்கிறார்கள். சதா கோயிலுக்குப் போய்க்கொண்டிருந்தால், அல்லது கடவுள் பெயரைச் சொல்லிக்கொண் டிருந்தால் போதுமானது. முன்காலத்தில் பிரஹ்லாதன், மார்க்கண்டேயன் முதலியோர் கடவுளையே சதா ஸ்மரித்துக் கொண்டிருந்ததால் அவர்கள் காரியம் கைகூடவில்லையா வென்கிறார்கள். கடவுளிடம் முழுப்பற்று வைப்பது நன்றென்பதை ஒருவரும் மறுக்கார். ஆனால் முழுப்பற்று என்பது மூடபக்தி ஆகாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்பது அறிந்தோர் கோரிக்கை. உதாரணமாக நமக்கு ஒரு வியாதி கண்டதென்றால் வைத்தியனிடம் போகாமல் கடவுளை நம்பிக்கொண் டிருந்தால் போதுமானது என்று நினைத்தோமானால் அந் நம்பிக்கையைக் கண்டு கடவுளே சிரிப்பார். ஒவ்வொரு சிறிய விஷயத்தையும் கடவுள் கவனிப்பதென்பது முடியாத காரியம். நாம் விளக்கை ஏற்ற விரும்புகிறோம். உடனே, திரியைத் தூண்டிவிட்டுத் தீக்குச்சியைத் தீப்பெட்டியில் உரைத்து விளக்கையேற்றுகிறோம். இச்சிறிய விஷயத்தில் எவ்வளவு அடங்கி யிருக்கிறது? ஒரு மனிதன் விளக்கைக் கண்டுபிடித்து அதை ஆயிரக்கணக்காய் தொழிற்சாலையில் செய்து விற்க ஏற்பாடு செய்திருக்கிறான். இன்னொருவன் மண்ணெண்

---

மனிதனுடைய உயர்ந்த விஷயங்கள் அவன் அருகிலேயே உள. அவன் பாதங்களின் அடியிலேயே அமையும்.

ணெய்க் கிணறுகள் இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடித்து, ஜனங்களுக்கு உபயோகமாகும்படி கடைகளில் விற்க ஏற்பாடு செய்திருக்கிறான். இன்னொருவன் தீயைச் சடுதியில் உண்டாக்க ஏற்பாடு செய்திருக்கிறான். இவைகளை விட்டு நாமே விளக்கைப் புதிதாய்ச் செய்து, மண்ணெண்ணெய் கிடைக்கும் பர்மா, பாரஸீகம், ருஷியா முதலிய தேசங்களுக்கு ஓடி எண்ணெய் கொண்டு வந்து, தீப்பெட்டியைப் புதிதாகச் செய்து விளக்கை ஏற்றுவதென்றால் எப்படியிருக்கும்? நாம் முட்டாள்களாவோமே தவிர இவ்வளவு சிரமம் ஒருவருக்கும் உபயோகமாகத் தோன்றாது. அதுபோல் கடவுள் உலகத்தில் பலபல வஸ்துக்கள் இருக்கின்றன. அவைகளைத் தேடியெடுக்க உனக்குக் கண்களும் அறிவும் தந்திருக்கிறேன். பார்த்துக்கொள் என்று சொல்லிவிட்டார். மனிதனுடைய அறிவு எப்படிப்பட்டது என்கிறீர்கள்? ஒரு குழந்தையை எடுத்துக்கொள்வோம். அதனிடம் ஒரு மோட்டார் வண்டி பொம்மையைக் கொடுக்கிறோம். வெகுசிறிய குழந்தையாயிருந்தால் வாயில் வைத்துக் கொள்கிறது. அக்கருவி என்ன ருசியெனப் பார்க்கிறதுபோலும்! கொஞ்சம் வயதானவுடன் அதைக் காதண்டை வைத்து ஆட்டிப்பார்க்கிறது. அல்லது அதனுள்ளே என்ன இருக்கிறதென்று உடைத்துப் பார்க்கிறது. அதாவது விஷயங்களை ஆராயும் சக்தி பிறந்ததுமுதல் மனிதனோடு வளர்ந்து அவன் இறந்துவிட்டால் நின்றுவிடாமல் அவனுக்குப் பின்தோன்றும் மனிதரிடம் விளங்குகிறது. ஒருவன் ஆராய்ச்சி அவனோடு இறக்காமல், மற்றவர் அவன் விட்ட இடத்திலிருந்து தொடர்ச்சியாகப் போகவும் சௌகரியமாயிருக்கிறது. உலகம் ஆரம்பித்தது முதல் இப்படியே மனிதனின் அறிவு வளர்ந்து வந்திருக்கிறது. நமக்கு ஒரு விஷயமும் குழந்தைகளுக்கு அன்னம் ஊட்டுவதுபோல் ஊட்டப் படுவதில்லை. நாமே இயற்கை வஸ்துக்களைக் கண்டு, நமது புத்தியைச் செலுத்தி அவற்றின் அர்த்தத்தைக் கிரஹித்துக் கொள்கிறோம். நுட்ப புத்தியுள்ள சிலருக்குச் சட்டெனப் புலப்படுகிறது. மற்றோருக்கு நிதானமாகவே புலப்படுகிறது. சூரிய வெளிச்சம் மலைகளின்மேல் முதலில் படுவதுபோல் சிலருக்கு ஞானம் சடுதியில் வந்து விடுகிறது. இதையே சிலர் கடவுள் வெளியிடுவது என்று சொல்கிறார்கள். நிற்க, நாம் இவ்வளவுதூரம் விஷயங்களை ஆராய்ந்து உலகத்தைப் பழைய வீடாக்கிக்கொண்டோமாயின் கஷ்டமென்ன? நமது வீட்டில் ஒவ்வொரு சாமானையும் அடையாளமாய் வைத்துக்கொண்டு விடுவோமாயின் பின்னர் "எது எங்கிருக்கிறதோ தெரியவில்லை. கடையிலிருந்து வாங்கிவரலாம்" என்று நாம் சொல்லுவோமா? அதைப்போல் உலகத்தில் நமக்கு அவசியமாய் வேண்டிய சௌகரியங்களைச் செய்துகொண்டால் பின்னர் ஒவ்வொரு முறையும் ஏன் கடவுளைத் தொந்தரவு செய்யவேண்டும்? அப்படி ஒவ்வொன்றிற்கும் அவரை நினைக்காவிட்டால் அவரை அலக்ஷியம் செய்ததென அர்த்தமல்ல. உலகத்தில் புதிது புதிதாய்க் கண்டுபிடிக்கப்படும் விஷயங்கள் ஒவ்வொன்றும் கடவுளின் அளவற்ற சக்தியை மேன்மேலும் விவரிக்கிறது.

நமது வீட்டில் ஏதேனும் பதார்த்தம் நன்றாயிருக்கிறதென்றால் சும்மா நன்றாயிருக்கிறதென்று சொல்லிவிட்டால் போதாது. அப்பதார்த்தத்தை மேலும் மேலும் தருவித்துப் புசித்தால்தான் செய்தவர்களுக்குத் திருப்தி. அப்படியே கடவுளுக்கும் உலகத்திற் கண்டிருக்கிறவற்றை உபயோகப்படுத்தி

---

கஷ்டங்களே மனிதனின் உண்மையான குணங்களை விளக்குவதாகும்.

ஞல் திருப்தியுண்டாகுமென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் உண்மையான பக்தி கடவுளைச் சும்மா நினைக்காமல் உலகத்திலிருக்கும் ரகஸியங்களை மேலும் மேலும் ஆராய்வது புத்திமான்களுக்கு அடையாளம்.

லைப் இன்ஷியூரென்ஸ் கடவுளின் பெருமையை விருத்திசெய்கிறதே தவிர குறைப்பதில்லை. இம்முறையை மனிதர் ஆராய்ந்து கண்டுபிடித்தது அவர்களுடைய புத்தி விசேஷத்திஞலல்லவா? இப்பேர்ப்பட்ட புத்தியை மனிதனுக்குக் கொடுத்த கடவுளைப் போற்ற ஒரு நா போதுமோ? போதாது. அவருக்கு நாம் போற்றவில்லை யென்பது ஒரு சிறிதும் வருத்தமுண்டாக்காது. ஆஞல் கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்காகத் தேடித் திரிகிறேமே என்றுதான் வருத்தத்தை யடைவார். ஆகவே நாம் லைப் இன்ஷியூரென்ஸ் என்னும் முறையை நன்குணர்ந்து அதைக் கைப்பிடித்து நமக்கும் நமது குடும்பத்திற்கும் குறையாத நிதியை ஏற்படுத்திக் கொள்ளக் கடவோம். அதுவே கடவுளின் மேல் நமக்கு உண்மை பக்தியிருப்பது வெளிவரும். ஆங்கிலத்தில் ஒரு வசனமுண்டு—'தர்மம் தன் வீட்டில் தொடங்குகிறது'. அதாவது நமது குடும்பம் க்ஷேமமாய் இருந்த பிறகே ஏழைகளுக்குத் தர்மம் செய்வதைப்பற்றி யோசிக்க வேண்டும். இதைவிட்டு மாதா வயிறெரிய மகேஸ்வர பூஜை செய்வதுபோல் நமது குடும்பத்தைப் பாதுகாத்து நமக்குப் பின்னும் சுகமாய் இருக்க வேண்டிய நிலைமையில் நாம் உயிரோடிருக்கும்போதே வைக்காமல் "எனக்குத் தெய்வபக்தியிருக்கிறது. அதுவே எல்லாம் கொடுக்கும்" என்ற மனநிலைமை தெய்வபக்தி யாகாது.

* * *

தினம் இரண்டு அணு சேர்த்தால் வருஷத்தில் சுமார் 45-ரூபாய் ஆகிறது. இத்தொகையைக் கொண்டு துணிகள் வாங்கலாம். இரண்டு வருஷங்களுக்குள் கிழிந்துவிடும். சிறியதோர் காமரா (camera) வாங்கிஞல் இஷ்டப்படி படங்கள் எடுக்கலாம். அது அந்தந்தப் பொழுது இன்பம் கொடுக்கும். அல்லது புதிய ஊரொன்றுக்குப் பிரயாணம் சென்று வரலாம். அது மனதிற்குச் சிறிது உற்சாகம் கொடுக்கும். அல்லது குதிரைப் பந்தயத்திற்குச் செலவழிக்கலாம். ஒருகால் கெலிக்கலாம். ஒருகால் தோற்றுவிடலாம். இரண்டும் மனதிற்கு வருத்தத்தைக் கொடுக்கும். முதலாவது இத்தனை ஜனங்களுக்கு வருத்தமுண்டாயிற்றே நாம் லாபம் சம்பாதிப்பதால் என்று: இரண்டாவது பணம் போய்விட்டதே யென்று.

பணத்தைப் பாங்கில் போட்டுவைத்தால் சொற்ப வட்டி கிடைக்கும். ஆஞல் இன்ஷியூரென்ஸ் சந்தாவாக செலுத்திஞலோ, 45-ரூபாய் ஆயிரம் ரூபாய் பத்திரமாகி, நமக்கு விபத்து நேர்ந்து, மேலே தொகை செலுத்தாவிட்டாலும் ஆயிரம் ரூபாய் முழுவதும் தவறுது குடும்பத்திற்குக் கிடைக்கும். தினம் தேவையானது இரண்டணுதான். அந்தத் துளிதான் பெரு வெள்ளமாகி நன்மை செய்கிறது.

[குறிப்பு:—லைப் அஷ்யூரென்ஸைப் பற்றி விவரமாக அறிய விரும்புவோர் "ஆனந்தபோதினி" வாரப்பதிப்பில் வெளியாகும் கட்டுரைகளைப் படிக்கவும். இவ்விஷயத்தில் ஏதேனும் சந்தேகம் தோன்றிஞல் ஆசிரியருக்கு எழுதலாம். தக்க பதில் அளிக்கப்படும்.]

---

கடவுளே! மெய்ப்புகழ் அருளும். இன்றேல் ஒன்றும் வேண்டாம்.

# ஈனேக் ஆர்டன்.

(T. ஸ்ரீனிவாஸ ராவ்., பி. ஏ.)

இங்கிலாந்தின் கடற்கரை யோரத்தில் ஒருசார் நீண்டு நிற்கு மலைத் தொடரும், அதில் ஓரிடத்தில் அலை ஓயாது மோதுவதால் ஏற்பட்டதோர் இடை வெளியும், அவ்விடத்திற்குச் சற்று தூரத்திற்கப்பால் சிறு துறைமுகமொன்றும் உண்டு. அதைச்சுற்றிலும் செவ்வோடுகளுடன் கூடிய வீடுகள் பல உண்டு. சற்று மேலே சென்றால் பழமையானதோர் வேதக் கோவிலொன்று தென்படும். அதிலிருந்து நீண்டதோர் வீதி இன்னும் மேலே சென்று மாவரைக்கும் ஆலை ஒன்றில் முடிவடைந்து நிற்கும். அதற்கப்புறம் பரந்த வெளியும், தூரத்தே அடிவானத்தில் வானைத்தொட்டு நிற்பதுபோன்று பழமரங்கள் பல அடர்ந்து காணும்.

இத்தகைய ஊரின் கடற்கரையோரம் பல்லாண்டுகளுக்கு முன் நம் கதை ஆரம்பமாகிறது. வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்த மூன்று குழந்தைகள் அங்கு விளையாடுவது வழக்கம். அதில் இருவர் ஆண்கள்; மூன்றாமவள் பெண். அன்னிலீ என்பது அவ்வழகிய சிறுமியின் பெயர். பிலிப்ரே என்பவன் அங்குள்ள இயந்திரசாலை எஜமானனின் சீமந்தபுத்திரன். மற்றையவனை ஈனேக் என்பவன் ஒரு மாலுமிச் சிறுவன்—தாய் தந்தையரை இளமையிலேயே இழந்தோன்.

இவர்கள் மூவரும் கடற்கரையோரம் மணலில் வீடுகட்டி விளையாடுவது வழக்கம். அலை இவர்களின் மண்வீட்டைக் கலைப்பதும், மறுபடி இவர்கள் வீடு கட்டுவதுமாக ஆனந்தமாய் இவர்கள் விளையாட்டு நடந்து வந்தது. சிற்சில சமயங்களில் செங்குத்தான பாறைக்கடியிலுள்ளதோர் குகையிலும் சென்று ஆடுவர். அக்காலை பிலிப் ஒருநாள் விருந்தாளியாகப் பாவனை செய்வான். ஈனேக் விருந்திடுவோனாக இருப்பான். மறுபடி விருந்திடும் முறை பிலிப் பிற்கு வரும். அப்பொழுது ஈனேக் விருந்தாளியாக மாறவேண்டும். அன்னி எப்பொழுதும் வீட்டு எஜமானி ஸ்தானத்தையே வகிப்பாள். ஈனேக் சுத்த முரடன். ஒரு வாரம் தொடர்ச்சியாய்த் தானே விருந்திடுபவனாக இருந்து, அன்னியைத் தன் சின்னஞ் சிறுமனைவியாக ஆக்கிக்கொண்டிருக்க விரும்புவான். பிலிப் பலவீனன். பாவம்! என் செய்வான்? 'ஐயோ' மாறி மாறி விளையாடுவோமே' என்று தன் நீலக்கண்களில் நீர்ததும்பக் கத்துவான். 'நண்பர்களே, என் பொருட்டாவது சச்சரவிடாமலிருக்க மாட்டீர்களா?' என்று கிள்ளைபோல் துக்கமேலீட்டால் கூறுவாள் அன்னியும்.

---

விக்கிரகங்கள் சந்தேகத்திற்கு இடமாயும், வணங்குவோரின் இதயத்திற்கு (எவ்வித நல்லுணர்ச்சியுந் தரச் சக்தியற்ற) சர்வ சூன்யமாயும் ஆகும் பொழுதுதான் விக்கிரக ஆராதனை தவறாகும்.

அவர்களின் இளமைப்பருவம் கழிந்தது. நண்பரிருவரும் காளைப்பருவ மெய்தினர். காதல் தீ இருவரையும் தகிக்க ஆரம்பித்தது. ஆகவே இளைஞரிருவரும் அவ்வொரு பெண்மீதே தம் நாட்டத்தை வைத்தனர். ஈனேக் கூசாமல் அவளிடம் தன்காதலைக் கூறிவிடுவான். ஆனல் பிலிப்போவெனில் அவளை மனதிலேயே எண்ணி எண்ணி உருகுவான். இது இப்படி யிருக்க, அன்னிக்கு பிலிப்மீது அத்யந்த அன்பு உண்டேனும், அவளை அறியாமலே ஈனேக்மீது அவள் மனம் காந்தத்தின் முன் இரும்புபோ லிருந்தது.

அன்னி மீது காதல்கொண்ட நாள் தொட்டு ஈனேக் கண்ணுங் கருத்துமாய்த் தன்னாலியன்றவரை பணம் சேர்த்து, சொந்தத்தில் ஒரு படகு வாங்கவும், அன்னிக்கேற்றதோர் அழகியவீடு சமைக்கவும் எண்ணினன். 'மனம் போல ஆயிற்று மாங்கல்யம்.' அவன் எடுத்த காரியம் யாவினும் வெற்றி பெற்றான். ஒரு வியாபாரக்கப்பலில் ஒரு வருடம் உழைத்து, மாலுமித்தொழில் நிபுணனாய்விட்டான். இருபத்தோராண்டு நிரம்புமுன், ஈனேக் ஒரு படகைத் தனக்கே சொந்தமாய் வாங்கினன். அன்னிக்கு சிறியதோர் குடிலைத் தெருவின் நடுமத்தியில் அமைத்தான். அதன் பின் விவாகமாக வேண்டுவதே பாக்கி.

அறுவடைகாலம் வந்தது. இயற்கை யன்னையும் மகிழ்ச்சி கொண்டவள் போலத் தோன்றினள். சிறுவர்களும், சிறிதும் பெரிதுமாய்க் கூடைகளைக் கையில் சுமந்தவராய்க் காட்டில் கொட்டை பொறுக்கச் சென்றனர். அன்று பிலிப்பின் தந்தை காயலாயிருந்ததால் பிலிப் சற்றுத் தாமதித்துச் செல்ல நேர்ந்தது. குன்றின்மீது ஏறிப் பள்ளத்தாக்கை நோக்கிக் கவிந்து நிற்கு மிடத்தை அடைந்தான். அங்கு ஒருபால் ஈனேக்கும் அன்னியும் நெருங்கி உட்கார்ந்திருக்கக்கண்டான். தன் விதியை எண்ணினன். அவர்களுடைய ஆனந்தத்தைப் பார்த்தான். மறுகிமிடம் அவ்விருவர் முகமும் ஒன்றை யொன்று நெருங்க ஆரம்பித்தது. 'உஸ்'ஸென்று பெருமூச்சு விட்டுக்கொண்டு, அம்பினல் அடிபட்ட மிருகத்தினை ஒப்ப மெல்லப் புதர்களுக்குள் மறைந்தான் பிலிப். ஊராரனைவரும் கூக்குரலிட்டுக் கும்மாளி போட்டுக் கொண்டிருக்க, பிலிப்மாத்திரம் தன்னந்தனியே மனமிடிந்து காட்டில் மறைவிடத்தில் சிறிதுநேரம் தங்கிப்பின் மனதில் அடங்காக் காமப் பிணிவருத்த எழுந்து சென்றான்.

* * *

சின்னாட்கள் கழிந்தன. கலகலவென எங்கும் மணிஓசை ஒலிக்க, ஈனேக்குக்கும் அன்னிக்கும் விவாகம் நடந்தேறியது. உற்சாகமாய் நாட்களும் கழிந்து சென்றன. ஓரேழு ஆண்டுகள் ஓடி மறைந்தன. அதனிறுதியில் அன்னிக்கோர் பெண் மகவு பிறந்தது. குழந்தை பிறந்த நாள்தொட்டு, ஈனேக் தன்னால் இயன்றவரை, பொன் சேமித்துத் தன்னைப்போலாவது தன் மனைவியைப்போலாவது அன்றி நல்வாழ்க்கையில் தன் குழந்தையை வளர்த்து வரவேண்டுமென்ற எண்ணங் கொண்டான். அவ்வாறு இரண்டு வருடங்கள் கழிந்தன. தங்கவிக்ரகம் போன்றதோர் ஆண்மகவை அன்னி ஈன்றெடுத்தாள். ஈனேக் வியாபார நிமித்தம் வெளியூர் செல்லுங்கால் அவன் ஏகாந்தத்தை இனிதுறக் கழிக்க ஏற்றபாலன். மீன் வியாபாரத்தில் ஈனேக் மிகவும் பெயர்

---

அவன் உலக முழுவதையும் எதிர்த்து நிற்க முடியும்—ஏனெனில் அவன் யாருக்கும் கடன்பட்டிருக்கவில்லை.

பெற்ருன். சுற்றுப்புறக் கிராமத்திலுள்ளோரில் அவனை அறியாதவரே கிடையாது.

மானவ வஸ்துக்களெல்லாம்மாறும் தன்மைய வல்லவா? ஆகவே, இத் தம்பதிகளின் இல்வாழ்க்கையிலும் மாறுதலொன் றேற்பட்டது. அக்குக்கிராமத்திற்குப் பத்து மைல்களுக்கப்பால் வடக்கே ஓர் துறைமுகமுண்டு. அங்குத் தரை மார்க்கமாகவும் கடல் மார்க்கமாகவும் ஈனேக் அடிக்கடி போவதுண்டு. ஒரு தடவை அத்துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சப்பட்டிருந்ததோர் படகின் பாய் மரத்தின் மீது ஏறுகையில் சற்றுக் கை நழுவவே தடாலெனக் கீழே விழுந்தான். ஈனேக் பக்கலிலிருந்தோர் பாய்ந்து வந்து அவனைத் தூக்கி நிறுத்தவே, அவனது அங்கங்களிலொன்று முறிந்து கிடக்கக் கண்டனர். பின்னர் ஈனேக் அதே கிராமத்தில் சிகிச்சை பெற்று வந்தான்.

இஃதிவ்வாறிருக்க, அங்கு அன்னி அரோக்கியமான ஆண்மகவைப் பெற்ருள். துன்பம் வந்தால் தொடர்ந்து வருமல்லவா? ஈனேக்கிற்குப் போட்டியாய் வியாபாரத்துறையி லொருவன் தோன்றவே, ஈனேக்கின் பிழைப்பிற்கு இன்னல் வந்தது. ஈனேக் மனேதிட முள்ளவன்தான். கடவுளுக்குப் பயந்தவன் தான். ஆயினும் அவன் மனதில் பலவித ஐயமும் துன்பமும் குடியேறின. தன் குழந்தைகள் வறுமை வாய்ப்பட்டு உண்ண உணவின்றித் தவிக்க, தன் அருமைக்காதலி அன்னி அகதிபோலிருப்பதாகவும் அவனுக்கோர் கனவென அவ்வெண்ணம் எழுந்தது. 'ஐயோ! கடவுளே! நான் எத்தகைய இடர்ப்படினும் அவர்களைக் காப்பாற்றுயா? என்று முறை யிட்டான். 'அம்முறையீடு அநாதரக்ஷகனின் காதில் விழுந்தது போலும்! முன்னர், எக்கப்பலில் ஈனேக் வேலைசெய்துகொண்டிருந்தானே அதே கப்பற்றலைவன், ஈனேக்கின் தொழில் வன்மையை நன்கு அறிந்தவனுதல்பற்றி, அவன் துர்பாக்கிய தசையைக் கேள்வியுற்று, அவனைக்காணவந்து சைனு போகவிருக்கும் தன் கப்பலுக்குத் 'தண்டேல் வேலையில் அமர இஷ்டமா? என்று அவனைக் கேட்டான். சற்றே ஈனேக் திகைத்தான். கடவுளே இரங்கி அம்முன்னீட்டைத் தந்துவரென மகிழ்ந்தான். ஓமென ஒப்பினன்.

ஆகவே மலைபோல் அவனுக்கேற்பட்ட துன்பம் பனிபோல் விலகிற்று. ஆனாலும் 'தான் இல்லாதிருக்கையில், தன் மனைவி ஜீவிப்பதெப்படி?' என்ற யோசனை அவன் மனதில் எழுந்தது. தன் படகைவிற்று—ஐயோ! எவ்வளவு அருமையாய் நேசித்தபடகு! பொங்கு திரைக்கடலில் எத்தனை முறை அவனைத் தாங்கிச்சென்ற படகு! பரியாளன் தன் பரியை அறிந்திருப்பதையொப்ப அவன் நன்ருய் அறிந்த அப்படகு—ஆம்! அப்படகையே விற்று மாலுமிகளின் குடும்பத்திற்கு வேண்டிய சரக்குகளைவாங்கி, அன்னியை வியாபாரத் துறையி லமர்த்திவிட்டால், அக்கவலை ஒருவாறு அகலும். திரைகடலோடியும் திரவியம் தேடவேண்டு மல்லவா அவன்? ஒரு முறையா அல்லது அதற்கு மேலா—ஏன்? வேண்டு மவ்வளவு அவன் கடற்பிரயாணம் செய்தே தீரவேண்டும். முதலில் துன்பப்படினும் முடிவில் செல்வவானுய்த் திரும்பிப் பெரிய வியாபாரத்திற் கெஜமானனுய், அளவற்ற லாபத்துடன் அமைதியான வாழ்க்கையை நடத்திக்கொண்டு, தன் இளஞ்சிறுர்களைப் பயில்வித்து, மனநிம்மதியாய் வாழலாமே என்றிவ்விதமான எண்ணங்கள் அவனுக்குத் தோன்றின.

---

நாணயத்தை இழந்தவன் இழப்பதற்கு வேறொன்றும் இல்லாதவனுவான்.

உடம்பு குணப்பட்டு ஊரை அடைந்தான். கையில் மெலிந்த மேனிய மகவைச் சுமந்துகொண்டு, அன்னி அன்புடன் அவனை வரவேற்றாள். குழந்தையை அவன் கரங்களில் ஈந்தாள். தந்தையும் தன் மகவை வாரியெடுத்து, அதன் அங்கங்களை நன்கு தொட்டுப்பார்த்துக் குழந்தையுடன் கொஞ்சினான். ஆனால் தான் எண்ணிக்கொண்டிருக்கும் எண்ணத்தை மறுநாள் வரை வெளியிட மனங்கொள்ளவில்லை.

மறுநாள்காலை தன்னைக் கைதொட்டு மணந்த நாள்முதல் அன்னி அன்று வரை தன் கணவனின் வார்த்தைக்கு எதிர் வார்த்தை கூறினவளில்லை. ஆயினும் அன்று அவன் எண்ணத்திற்கு எதிர்த்து நின்றாள். அடங்காப் பிடாரியென அலறினாளில்லை. மனதைக்கரைக்கும் மொழிகளாலும், இடைவிடாதளிக்கும் மென் முத்தங்களாலும், கண்ணீருகுத்தலாலும், இரந்து கெஞ்சும் சொற்களாலும் தன் கணவன் தன்னைவிட்டுப் பிரிந்து செல்லக்கூடாதென மன்றாடினாள். அதன் காரணமாக இன்னல் பல விளையுமென்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால் அவள் வேண்டுகோளனைத்தும் விழலுக் கிறைத்த நீராயின. ஈனேக் ஒரே பிடிவாதமாய் நினைத்ததை நிறைவேற்றி விட்டான்.

படகை விற்றான். சரக்குகள் பல வாங்கினான். தன் வீட்டு வாசல் புறத்தை ஓர் சிறு கடையாக அமைத்து, அதில் சாமான்களை வைக்க அறைகளுடன் கூடிய தட்டுகளைச் செய்து வைக்க ஆரம்பித்தான். அன்று முழுவதும் இடைவிடாமல் அவ்வீட்டில் சம்மட்டி சப்தம் ஓர்பக்கம், ரம்பங்கொண்டு அறுக்கும் சப்தம் ஓர் பக்கம், அதன் பின்னர்-பலகையைத் துளைக்கும் சப்தம் மற்றோர் பக்கம், கோடரியின் பேரொலி ஒரு பக்கம் எங்குமாகப் பரவி நின்றன. அச்சப்த மெல்லாம் அன்னியின் காதில் அவளது சாவிற்குத் தயாரிக்கப் படும் கழுமரத்தின் ஓசையென ஒலித்தன. ஈனேக்கின் கைவன்மையின் பயனாக எல்லாம் அழகுபட அமைந்தன. வேலை முடிந்தபின், ஈனேக் மறுநாள் வரை அயர்ந்துறங்கினான்.

கதிரவனும் கீழ்த்திசை எழுந்தான். ஈனேக் செல்ல வேண்டியது அந்நாளே. அதுபற்றி அவன் அளவற்ற இன்பமெய்தி யிருந்தான். அன்னியின் பயமெல்லாம் அவனுக்கு நகைப்பை விளைத்தன. ஆயினும், பயபக்திகொண்டவனாதலின், முழங்கால் படியிட்டுத் தன் மனைவியையும் குழந்தைகளையும் எல்லாவித ஆபத்தினின்றும் காக்கவேண்டுமென ஈசனைத் தொழுதான். 'அன்னி! கடவுள் கிருபையால் நமக்கு இப்பிரயாணம் நன்மையையே நல்கும். வீட்டைப் பார்த்துக்கொள். நீ அறியுமுன்னரே நான் திரும்பிவந்துவிடுவேன்' என்றான் ஈனேக். பின்னர் மெல்லெனக் குழவியின் தொட்டிலை ஆட்டிவிட்டு, 'இவ்வழகனை, பலவீனனான இப்பாலனைக் கடவுள் ஆசீர்வதிக்கட்டும். நான் திரும்பி வருங்கால் இவன் என் முழங்கால்களில் அமருவான். அன்னிய நாட்டுக் கதைகளை வெகு ஆர்வத்துடன் அவனுக்கு நான் கூறுவேன். அவனும் ஆர்வத்துடன் கேட்டு ஆனந்திப்பான். அன்னி, வருந்தாதே-நான் சென்று வரட்டுமா?' என்றான்.

நம்பிக்கை தோன்ற அவன் மொழியும் சொற்களைக் கேட்டாள். அவன் கடவுளைப் பற்றிப் பேச ஆரம்பித்தவுடன் மெய்ம்மறந்தாள். அதன் பின் அவன் காதில் ஒன்றும் விழவில்லை. 'ஈனேக், நீ உயரிய புத்திமான்தான். நீ எது

---

நூலறிவு "பேசும்"—மெய்யறிவு "கேட்கும்."

கூறினும் உன்னை மறுமுறை தரிசியேன் என்று என் மனதில் ஏதோ ஒன்று எடுத்துரைக்கின்றதே' என்ருளவள். 'ஆனல் சரி. நீ என்னைப் பாராவிடில், நான் உன்னைத் திண்ணமாய்ப் பார்ப்பேன். அன்னி, நான் சொல்லும் மரக் கலம் அடுத்த திங்கட்கிழமை இவ்வூரைக் கடந்து செல்லும். அக்காலை யாரிட மிருந்தாவது ஒரு தூரதிருஷ்டிக் கண்ணாடியை வாங்கி அதன்மூலம் என் னைப் பார். உன் கவலையை ஒழி' என்ருன். புறப்படவேண்டிய நேரம் கிட் டிற்று. 'அன்னி, என் காதலி, என் அன்பே, வருந்தாதே! சமாதானங்கொள்! எல்லாம் தெரிந்த நீயே இவ்வாறு வருந்தலாமா? குழந்தைகளை நன்கு பாது காப்பாயாக. அப்படி உனக்குப் பயம் தோன்றிடில் கருணாநிதியாகிய கடவுள் மேல் பாரத்தைப்போடு!-அவனிருக்கிருன் அச்சுமையைத் தாங்க. அவன் சர்வ வியாபி. நான் எங்குச் சென்றிடினும் அங்கும் அவனிருப்பான். கடலும் அவ னது! அவன் படைத்தது அது' என்று கூறிக்கொண்டே ஈனேக் எழுந்தான். வருந்தி நிற்கும் மனைவியை வாரியணைத்தான். ஆச்சரியத்துடன் நிற்கும் குழந்தைகளை முத்தமிட்டான். மூன்ரும் குழந்தை முதல் நாள் கண் விழித்த தால் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தது. அன்னி அவசரமாய் அதை எழுப்ப முயல, ஈனேக் அன்னியைத் தடுத்து, 'ஐயோ, அதையேன் அலட்டுகிருய்! குழந்தைகள் இதையெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இருக்கப்போ கின்றனவா?' என்று கூறிவிட்டு அம்மகவை உச்சிமோந்தான். அக்குழந்தை யின் உச்சி நெற்றியில் சுருண்டு தொங்கும் கூந்தலில் ஒரு சுருளைக் கத்தரித்து அதை அவளிடம் ஈந்தாள். தன்னுயுள் உள்ளவரை அதைப் பாதுகாத்தான் ஈனேக்! மூட்டையைக் கையில் பற்றியவனுய், கையை விசிறிக்கொண்டு தன் பாதையில் நடந்தான்.

* * *

ஈனேக் குறித்த திங்கட்கிழமை அன்னி கையில் கண்ணாடியை வைத் துக்கொண்டு திருகித் திருகிப் பார்க்கிருள். அங்கமெல்லாம் நடுங்குகிறது. அவள் கண்ணிற்கு எக்காரணத்தினுலோ ஒன்றும் தெரியவில்லை. ஆனல் தன் சொற்படியே ஈனேக் மரக்கலத்தின் மேல் தட்டில் கைக்குட்டையை விசிறிக்கொண்டே நின்றிருந்தான். மரக்கலமும் மறைந்தது. கண்பார்வையி னின்றும் அது மறையும் வரை அன்னி அதைப் பார்த்து நின்ருள். அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் வீட்டுக்குத் திரும்பினுள். ஈனேக் இறந்துவிட் டானென்றே எண்ணிக் கதறினுள். வியாபாரம் செய்து பழக்கப்பட்டவளா? வியாபார தந்திரங்களெல்லாம் தெரியாது. பாவம்! பொய், புனை சுருட்டு ஏதாவது தெரியுமா? அதுவும் தெரியாது. ஆகவே, சில சமயங்களில் தீராக் கஷ்டத்தினுலும் வேறுவகை யின்றியும், சில சாமான்களை வாங்கின விலைக்கு மிகக் குறைத்தே விற்ருள். வியாபாரத்தில் நஷ்டமடைந்தாள். நற்செய்தி வரும்வருமென்று நாட்களைக் கழித்தாள். நாளை நாளை யென்று நாட்களும் கடக்க, சொல்லொணுத் துன்பத்திடை அரை வயிறுக் கஞ்சிக்குமில்லாமல் அன்னி தன் நாட்களைப் போக்கினுள்.

மூன்ரும் குழந்தை வயதாக வயதாகப் பின்னும் பலஹீனமடைந்தான். அன்னை தயை யனைத்தும் அன்னி அதற்களித்தும், அல்லல் பல பட்டுத் தன் அன்னை அறியு முன்னரே, கூண்டிலகப்பட்ட பஞ்சரம் குபீலெனத் தப்பிச் செல்லுவதுபோல் அக்குழந்தையின் ஆவி அதன் கூட்டினின்றும் மின்னலென வெளிப்பட்டு மறைந்தது. பாவம்! என் செய்வாள் தாய்!

குழந்தை இறந்த அதேவாரம் ஈனேக் சென்று பல நாளாயும் அநாதி போலவிருக்கும் அன்னியைக் காணமலிருந்ததற்காக பிலிப் தன் மனதை நொந்துகொண்டான். தான் அவளைப் பார்ப்பது அவளுக்கு ஆறுதல் அளிக்கக்கூடுமென எண்ணி அங்குச் சென்றான். முன்னறையைக் கடந்து உட்கதவண்டை சென்று ஒரு விநாடி தயங்கினன். மெல்லென மூம் மூறை கதவைத் தட்டினன். பதிலொன்றும் கிடைக்காது போகவே உள்ளே நுழைந்தான். துக்கமே யோர் உருக்கொண்டாற்போல், குழந்தையைக் குழியில் போட்டுத் துக்கம் தீராமல், ஒருவர் முகத்திலும் விழிக்க மனமின்றி அன்னி சுவர்ப்புறம் திரும்பி இருந்துகொண்டு குமுறிக் குமுறி அழுதுகொண்டிருந்தாள். 'அன்னி, உன் உதவியை நாடி வந்தேன்' என்று பிலிப் மெல்லக்கூற 'துன்பக் கடலில் மூழ்கித் தத்தளிக்கும் ஒருத்தியிடமிருந்தா உதவி?' என்று அன்னியிடமிருந்து எழுந்த மொழிகள் அவன் இதயத்தை நூறு கோடரிகள் சேர்ந்து தறிப்பதை ஒத்திருந்தன. அவளருகில் அமர்ந்தான். 'அன்னி, உன் கணவன் எதை விரும்பியிருந்தானே அதைப் பற்றியே பேசவந்தேன். என்றான். 'ஈனேக் திடசித்தங் கொண்டவன். ஆரம்பத்திலேயே உன்னை மணக்க விழைந்தான். அவ்வாறே செய்து முடித்தான். இப்பொழுது உன்னைத் தனியே விடுத்துச் சென்றிருக்கிறான்? இன்பமெய்தவா? ஊர் சுற்றவா? அல்ல! அல்ல! தன் குழந்தைகட்கு உயரிய வாழ்க்கையை அளிக்க எண்ணங்கொண்டே. மறுபடி திரும்பி வந்து தன் குழந்தைகள் கடாரிகள்போல் தான் தோன்றித்தனமாய்த் திரிவதைக் கண்டால் அவன் எவ்வாறு சினங்கொள்வான்? அன்னி, இப்போ—நீ என்னை வெகுநாளாய் அறிவாயல்லவா? உனக்கு உன் காதலன்மேலிருக்கும் காதலுக்கும் உன் மக்கள்மேலிருக்கும் பாசத்திற்கும் வேண்டி நான் கேட்பதற்கு 'இல்லை' என்று கூறுதல்கூடாது. உன்னை மன்றாடிக் கேட்கிறேன். ஏனெனில், நீ விழைந்தால், ஈனேக் திரும்பிவரும் பொழுது—ஏன்? ஈனேக் பணமுனதே—உன் பையனையும் பெண்ணையும் பள்ளியிலிருத்துகிறேன். இதுவே நீ செய்யவேண்டிய உதவி' என்றான்.

சுவரை நோக்கிய வண்ணமே அன்னி பதிலுரைத்தாள் 'பிலிப், உன்னைப் பார்க்கவே எனக்கு மனமில்லை. நான் பித்துப்பிடித்தவள் போலிருக்கிறேன். நீ உள்ளே வந்ததும் மனமுடைந்துவிட்டது. இப்பொழுது நீ பேசும் இன்சொற்கள் என்னை இன்னும் வருத்துகின்றன. ஈனேக் பணத்தைத் திருப்பிக்கொடுத்துவிடுவான். ஆனல் உன் தயாள குணத்தை எவ்வாறு திரும்பக் கொடுப்பான்.' "ஆனல் நீ என தெண்ணத்திற்கு இனிச் சரியென்கிருயல்லவா!" என்றானவன்.

அன்னி சட்டெனத் திரும்பினள்! எழுந்தாள்! ஒருமுறை பிலிப்பை நீர் ததும்பும் கண்களால் பார்த்தாள். 'நீ தீர்க்காயுளுடனிருக்கவேண்டுமெனக் கூறிவிட்டு அவன் கையை ஆத்திரத்துடன் பிழிந்தாள். உத்சாகத்துடன் பிலிப் வெளிப்போந்தான். பையனும் பெண்ணும் பள்ளியில் சேர்க்கப்பட்டனர். வேண்டிய புஸ்தகங்களையெல்லாம் பிலிப் அவர்களுக்கு வாங்கிக் கொடுத்தான். தன் கடமையைச் செய்து முடிப்பவன்போல் அனைத்தும் செய்தான். ஊர் வாய்க்கஞ்சி, பிலிப் அன்னியின் வீட்டுப்புறம்கூட வரவில்லை. ஆயினும் அடிக்கடி குழந்தைகள் மூலம் பழம், மாமுதலியன அனுப்புவான். (தொடரும்.)

---

செயற்கை தவறலாம்; இயற்கை தவற இயலாது.

# "கர்நாடக நாடக விநோதம்"

(ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

மாம்பழப்பட்டு கிராமத்திலே, மூன்று தெருக்கள் சந்திக்கும் இடத்திலுள்ள துர்க்கையம்மன் கோயிலுக் கெதிரிலே, இரவு அவ்வூர் வாசிகள் பத்து மணிக்குமேல் திரண்டு உட்கார்ந்திருந்தனர். அவ்வூர் நாட்டாண்மைக்காரர் கருப்பண்ண கவுண்டர் பொறுக்கமுடியாத வயிற்றுவலி யால் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருந்தபோது, அவ்வலியைத் தீர்த்து வைத் தால் அம்மனுக்கு மனம்குளிரக் கேளிக்கை நடத்திவைப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டதற்கிணங்க, அன்றிரவு கேளிக்கை நடத்திவைக்க ஏற்பாடு செய்திருந்தார். (தெருக்கூத்தை 'கேளிக்கை' என்பது ஒரு சாரார் கிராம வழக்கம்.) அம்மன் சந்நிதிக்கு எதிரில் கேளிக்கை நடத்திவைத்தால், அம்மனுக் குத் தன் விஷயத்தில் மிக்க சந்தோஷம் உண்டாகுமென்பதும், வேளாண்மை யிலும் நல்ல இலாபம் கிடைக்குமென்பதும் கவுண்டரது கருத்து. மேலும், அவரே அவ்வூர் சாராயக்கடைக் குத்தகைக்காரராக இருந்ததனுல், கேளிக்கை யில் நடிப்பவர்கட்கு அவரவர் மனம்போல் தாராளமாக சாராயம் அளிக்கப் பட்டபடியால், நடிகர்களது கண்கள் கண்ணபிரானது கண்களைப்போல் செந்தாமரையை ஒத்துச் சிவந்து விளங்கின.

நவீன நாகரிக நாடகக் கொட்டகைகளைப்போல், சோபா, நாற்காலி, பெஞ்சு முதலிய வகுப்பு பேதங்கள் அங்கு இல்லை. சில வருஷங்களாக காங் கிரஸ் மகாசபை கூடிவருவதுபோல் அங்கிருந்த எல்லோரும் தரையில் அமர்ந் திருந்ததினுல் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் அங்கு எவ்வித வித்தியாச மும் இல்லை. எவர் தலையில் பெரிய தலைப்பாகை சுற்றப்பட்டிருந்ததோ, அவரே அவ்வூருக்குள் தனவந்தர் என்பது விளங்கிற்று. நாற்காலிகளில் உட் கார்ந்தபடியே உறங்கிவிழும் நிர்ப்பாக்கியர்களைப் போலவன்றி, எங்கு உட் கார்ந்து கொண்டிருந்தார்களோ அங்கேயே கால்மாடு தலைமாடு கவனியாமல் சொந்த வீட்டைப்போல் படுத்துக்கொண்டு தூங்கும் பரிபூரண சுதந்தரம் தெருக்கூத்துக்கு வருவோர்க்கே உண்டு. பணம் கொடுத்து டிக்கட் பெற் றோர் ஒருவரும் அங்கில்லையாதலின், "கைதட்டி கலகம் செய்பவர்களை போலீசார வசம் ஒப்புவிக்கப்படும்"—எனும் மிரட்டல் அவர்களிடையில் அனுவசியமாகிவிட்டது. படிப்படியாக ஏறும் 'ஒன்ஸ்மோர்! ஒன்ஸ்மோர்!!' எனும் கூச்சல், தெருக்கூத்தைப் பார்ப்போர் திரளிலிருந்து உண்டாவதில்லை யாதலால், தெருக்கூத்தாடிகள் வைத்ததே சட்டம். வேஷங்களில் மட்டு மன்றி, நாடகம் நடிக்கும் உரிமைகளிலும் அவர்களே 'ராஜாக்கள்' ஆவர்.

---

பெரியோர் அடைந்து அனுபவிக்கும் உயர் ஸ்தானங்கள் திடீரென்று பெறப்பட்டவை அல்ல. பிறர் தூங்கும்பொழுது அவர் இரவில் இடைவிடாது வேலை செய்தவராவர்.

அவர்களது நாடகமேடைக்கு—அதாவது ஸ்டேஜுக்கு—தற்கால ட்ராமாக்களில் பெரும்பாலும் காணப்படும் காலதேச வர்த்தமானங்களுக்குப் பொருந்தாத—இயற்கைக்கு மாறான—காட்சித்திரைகள் முதலியன தேவையின்மையால், ஒரு விசுப்பலகையே போதுமானதாக இருந்தது. தலைகீழாகப் போடப்பட்ட ஒரு உரலே, அவர்கள் வீற்றிருந்து ஆட்சி செலுத்தும் சிங்காசனம் ஆகும். நாடகம் தொடங்கப்படுவதன் முன் அரைமணி நேரம் வரை, அவ்விசுப்பலகையாகிய ஸ்டேஜில் சிலர் மத்தளம் தட்டிக்கொண் டிருந்தபின், விதூஷகா ஸ்தானத்திலிருந்து நாடக ஆரம்பம் முதல் முடிவுவரை தன் மனம் போனவாறெல்லாம் தாறுமாறாகப் பேசியும் பாடியும் ஜனங்களை சிரிக்கச் செய்யும் கட்டியக்காரன் தோன்றி,

"கட்டியக்காரன் வந்தான்—கனசபையோர்கள் முன்னே
கட்டியக்காரன் வாரான்.
கட்டிச் சல்லடம்கட்டி கடகம் பளபளென்ன
நெற்றியில் திலகம்மின்ன நீலப் பட்டாடைமின்ன—கட்டியக்காரன்

என்று' பாடி முடித்தபின், சபையோரை நோக்கி,

"அகோ கேளுங்கள் சபையோர்களே! இப்பவும் வெள்ளிபங்கிரி விளங்காநின்ற—கைலாசமே கோயிலாக வீற்றிராநின்ற—அந்த முக்கண்படைத்த பரமேசுரர் இருக்கின்றாரே, அவர் திருக்குமாராகிய விக்கினேசுரர் என்று சொல்லப்படாநின்ற ஆனைமுகக் கடவுள் சபாவாகிய கொலுவைநாடி வருகிறவிதம் காண்க"—என்று கூறியபின், சிலர் கூடி ஒரு துணியைத் திரையாக பிடித்துக்கொண்டு நின்றனர்.



ஒரு சிறுவனை-அட்டையால் செய்த ஆனைமுகம் ஒன்றாலேயே அவனுக்கு சாக்ஷாத் விநாயகப் பெருமானது வேஷத்தைப் போட்டுவிட்டதுபோல் எண்ணிக் கொண்டுவிட்ட சிலர் அழைத்துக்கொண்டு வந்து, சில நிமிஷங்கள் அத் திரைக்குள் நிறுத்தியிருந்தபின் திரையை எடுத்துவிட்டு அவனது இருபுறமும் இருவராக அவனைப் பிடித்துக் கொண்டு நின்றனர். பின் இருவரும் பின்வருமாறு பாடத் தொடங்கினர்.

"வீரமுக சுந்தர விநாயகர் வந்தார்—மிகு
விந்தை சேர் அடியவர்க்கே வெற்றியைத் தந்தார்

---

அழகுக்கு அணிகளாகிய அன்னிய உதவி தேவையில்லை. அணிகள் வேயாத பொழுதே அதிக அணிகள் வேய்ந்ததாகும்.

ஓதற் கரு மார்பில் முப்புரி இலங்க—சொலும்
உச்சிதப் பட்டாடையும் ஒட்டியாணம் துலங்க
சீத மலர்ப் பதத்தில் கெச்சைகள் கொஞ்ச—எண்
திக்குகள் அதிரச் செஞ்சிலம்புகள் மிஞ்ச
சர்க்கரை அவற்கடலை பக்குவக் கதலி தேங்காய்
கற்கண்டு எள்ளுருண்டை தோசை அக்கரையாய்க் கொண்டே பாங்காய்
—வீரமுக சுந்தர விநாயகர்"

பாவம்! முகத்தின்மேல் அட்டை யானைமுகத்தை வைத்துக்கொண்டிருக்கும் சிறுவனுக்கு அப்பாட்டைப் பாடும் சிரமத்தை வைக்காமல், அப்பாட்டுக்குச் சரியாக அவன் அடகு போட்டு ஆடுகின்றானோ என்பதிலேயே கவனம் வைத்துநிற்கும் அவனைப் பிடித்துக் கொண்டிருந்த இருவரும் அப்பாட்டைப் பாடி முடித்தனர். அடகுபோட்டு ஆடுவதில் அடியைக் கொஞ்சம் தவறி வைத்துவிட்டாலோ, பாவம் அச்சிறுவனது தோல்களை அழுத்திக் கிள்ளிச் சரியாக ஆடச் செய்வார்கள். நாடகத்திற்கு விக்கினம் வாராதபடி அருள்புரிய சபையில் தோன்றிய விநாயகர், (அதாவது அவ்வேஷம் பூண்டவன்) தனக்கு கஷ்டம் அதிகரிக்காதபடி கவனித்துக் கொள்வதிலேயே கருத்தை முற்றும் செலுத்தவேண்டி வந்தது.

பாட்டு முடிந்தபின் அவ்வேஷ விநாயகர் "அகோ வாரும் பிள்ளாய் பாலர்களே! இன்றைக்கு நடக்கக்கூடிய நாடகத்தில் ஏற்படக்கூடிய யாதொரு பிழைகளாகிய-மேளப்பிழை தாளப்பிழை சீர்ப்பிழை பாட்டுப்பிழை வசனப்பிழை ஆர்மோனியப் பிழைகளை நாமென்று க்ஷமித்து, உங்கள் நாடகத்தைச் சரிவர நிறைவேற்றி வைக்கிறேன் பாலர்களே! நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம்!"—என்று திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறு அச்சிறுவன் சொல்லி முடித்தானோ இல்லையோ, அவனருகில் நின்றிருந்த கட்டியக்காரன் அவனது கழுத்தில் கையைவைத்து நெட்டித் தள்ளவும், அச்சிறுவன் மிக்க மகிழ்ச்சியுடன் ஓடி ஒளிந்தான்.



பின்னர் திரை பிடிக்கப்பட்டது. பள்ளிக்கூடத்தில் முதல் வகுப்புப் பையன்கள் பாட்டு ஒப்புவிப்பதேபோல், தங்களால் எவ்வளவு கூடுமோ அவ்வளவு உயர்ந்த குரலில் ஏகாகத்தில் எல்லோரும் சேர்ந்து சில பாட்டுக்கள்

---

கூறுவது முரணாகத் தோன்றினும்—அறிவில் முன்னேற்றம் அடைவதை நாம் அறிவதின் அளவு சுருங்குவதே காட்டும்.

பாடியிருந்தபின், ராஜா வேஷம்பூண்ட முக்கிய நடிகர் அத்திரைக்குப் பின் வந்து சேர்ந்தார். பின்னர் சில பாட்டுகள் பாடப்பட்டபின் திரை தரையோடு தாழ்த்தப்பட்டு ஒரு நிமிஷத்திற்குப் பின் மீண்டும் உயர்த்தப்பட்டது. அவ்வொரு நிமிஷத்திற்குள் ஒரு காலைக் கீழே தொங்கவிட்டு மற்றொருகாலை முழங்காலின்மீது வைத்து உலராகிய சிங்காசனததில் கம்பீரமாக வீற்றிருந்த அவ்வேஷதாரி, செவியளவும் நீண்டு முறுக்காக நிற்கும் பன்றிமயிரால் செய்த கட்டை மீசைகள் துடிக்க ஏற்கனவே உட்கொண்டுள்ள ஆகாசப் பாலால் சிவந்துள்ள கண்களை 'ஒரு உருட்டு' உருட்டி 'ராஜவிழி' விழித்து 'ஆஹா ஹா!' என்று கர்ச்சித்த காட்சி, அதற்குமுன் அவ்வூர்வாசிகள் பலமுறையும் கண்டறிந்திருந்ததே யாதலின் அவர்களுக்குச் சாதாரண காட்சியாகவே இருந்தது. அதே காட்சியை நாகரிகம் மிக்க நகரவாசிகள் கண்டிருப்பாராயின் உண்மையில் பயந்தேவிடுவர்.

அவ்வேஷதாரியான மகாராஜா தனது கால்களில் சதங்கைகள் கட்டிக் கொண்டும், ஒரு கையில் கைகுட்டையும் மற்றொரு கையில் மரத்தால் செய்த கத்தியும் கொண்டும், முழுநிஜாரும் அணிந்து அதன்மேலும் முழங்கால்கள் வரையில் நான்கைந்து பாவாடைகள் கட்டிக்கொண்டும் விளங்கினர். கலியாண முருங்கைக் கட்டைகளால் செய்யப்பட்டு கந்தருவரது சிறகுகள் போன்று தங்கரேக் தாள்களால் சித்தரிக்கப்பட்டுள்ள புஜககட்டைகளும் மரத்தால் செய்யப்பட்டு வர்ணம் பூசப்பெற்ற மகிரி பதக்கங்கள் சரப்பளிகள் முதலிய 'நகைக'ளும் முகத்தைப்போல் இரண்டுமடங்கு நீளமுடைய கிரீடமும் அணிந்து விளங்கிய அவரைக் கண்டபோது முற்காலத்து மகாராஜாக்கள் இப்படித்தான் இருந்திருப்பார்களோ என்று அங்கிருந்தோர் எண்ணிக்கொணடு விட்டனர் போலும்!

பின்னர் அருகிருந்தோர் திடுக்கிட அவ்வேஷதாரியாகிய ராஜா விசப் பலகையின் மீதே 'தடால்' என்று ஒரு குதி குதித்துக் கீழிறங்கி காகரவென்று சுழன்று வந்து முழங்கால்களாலேயே பின்னோக்கிச் சென்று எழுந்து நின்று 'ஆகாகா!' என்று ஒரு குதி குதித்தபின், இருபுறமும் தீவட்டி பிடிதது நின்ற வண்ணார் இருவரும் மேளக்காரன் தாளக்காரன் பின்பாட்டுக்காரன் கட்டியக்காரன்—இத்தனைபேரும் தன்னுடன் சுற்றிவர ஆட்டு போட்டுக் கொண்டே ஒரு சுற்று சுற்றிவந்தார். அச்சமயம் வண்ணான் பிடித்திருந்த தீவட்டியின ஒளி[illegible]யை அதிகப்படுத்தி அ[illegible]வொளியில் தனது வ[illegible]வழகை சபையோர்க்கு[illegible] நன்கு காட்ட எண்ணிய [illegible]ந்த ராசா, தனது கையிலிருந்த மரக்கத்தியால்—இல்லை—கத்தி (மரப்)பட்டையால் அத் தீவட்டியை ஒரு தட்டு தட்டினர். அதிலிருந்து உதிர்ந்த சில



---

அறிவை விலைக்கு வாங்கமுடியும். ஆனல் உணர்ச்சி (அன்பு) ஒருநாளும் சந்தைக்கு வருவதில்லை.

தீப்பொறித் துணுக்குகள், கீழே உட்கார்ந்திருந்த சில சிறுவர்கள்மீது படவும், அவர்கள் 'ஐயோ! அம்மா!' என்று அலறி துணியை உதறிக்கொண்டு எழுந்தோடிவிட்டனர்.

பின்னர், அந்த வேஷராசா தனது கீர்த்திப் பிரதாபங்களையும் ஆபரணாதி அலங்காரங்களையும் வர்ணித்துப் பின்வருமாறு பாடலானார்:—

"வந்தான் ராஜாதிராஜ தீரன்—ததிதா—ததிதை—மிக வடிவினிலழகிய
வாரான் ராஜாதிராஜ மாரன்
வந்தான் ராஜாதி ராஜன் விந்தையுடைய தேஜன்—
தாகிடதோம்—தினகரத்தை—தாதய்யத்தோ—தரிகிணதை
மாரனென்றுமே தீரர்கள்நாட
மையல் கொண்டுமே மங்கையர் வாட—வந்தான்
முத்துசுட்டி நெத்தியில் மின்ன மோகவஞ்சியர் புகழுரை பன்ன
பத்தரை மாத்துப் பணி துன்ன—
சித்திரப்பணி சிங்காரன் சிரந்த வடிவில் மாரன்
தேசமெங்கிலும் புகழ்ச்சிகள் பேச
ராஜராஜர்கள் மகிழ்ந்துகண் கூச—வந்தான் ராஜாதிராஜ தீரன்

(வேறு தரு.)

வீர மகாராஜன் வந்தானே—வீராதி வீரன்
வீர மகாராஜன் வந்தானே
திகுடதோ திகடதோ திகடதோ ததிங்கணதோம் ததிங்கணதை
நெற்றியில் மகுடம் மின்னவே—கையிற்கொண்ட
நேர்மையான வாளும் மின்னவே—வீரமகாராஜன்

அப்பாட்டைப்பாடி முடித்தபின், அந்த 'ராசா' தமது சிங்காசனமாகிய உரலில் வீற்றிருந்தார். பின் கட்டியக்காரன் அந்த ராசாவை நோக்கி, "சபாவாகிய கொலுவை நாடி வந்திருக்கும் மகாராசாவின் நாமதேயம் என்ன? இவ்விடம் நாடிவந்த சேதி என்ன? எல்லாம் சவிஸ்தாரமாகத் தெரிவித்தருள வேண்டும் பிரபுவே!"—என்று கேட்டுக்கொண்டான். (இவ்வளவு நேரம் ஊர் பேர் தெரியாத ஒரு அநாமதேயப் பெயர்வழியே சபையோர் முன் தோன்றி ஆடிப்பாடிக் கொண்டிருந்தார் போலும்!) அதுகேட்ட அந்த ராசாவும், அகோவாரும் பிள்ளாய் மதிமந்திரியே! தற்சமயம் நமது நாமதேயம் இன்னதென்பதை தெரிவித்தாக வேண்டுமோ? ஆனால், விவரமாய் தெரிவிக்கிறோம் கேளும் மந்திரியே! (ராஜாவின் பெயரை முன்பின் தெரியாத ஒருவர், அவரது தேச விசாரணைக்குத தகுந்த பதில் சொல்லிவரும் மந்திரியாக இருப்பது எவ்விதமோ?) அயோத்தியாபுரி மகாபட்டணத்தை தகத்தோடும் கூடி பரிபாலனம் செய்து வராநின்ற—ரதகஜ துரக பதாதிகளாகிய சதுரங்க சேனைகளின் துணையோடும் கூடியிராநின்ற—ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்

---

"நாவன்மை" என்பது ஆன்மாவின் இடையீடில்லாத இயக்கமே யாகும். தற்காலம் அலங்காரமாய்ப் பேசுவோர் "நாவலர்" அல்லர். பலசொல் அடுக்கிப் பாமரரை மயக்க நன்கு பழக்கப்படுத்தப்பட்ட நாவினரேயாவர்.

களும் அடிபணிந்து கப்பம் கட்டிவராநின்ற—அரிச்சந்திர மகாராஜன் என்னு நாமதேயம், அறிந்து கொண்டீரா மந்திரியே! நமது தேசத்திலே நாலுவேதம், ஆறுசாஸ்திரம் மனுவிக்ஞானம் அறுபத்துநான்கு கலை தொண்ணூற்றாறு தத்துவம் முதலானவைகளை இடைவிடாமல் ஓதிவரக்கூடிய வேதியர்கள்—அவர்களது தருமங்களில் தவறாமற்படிக்கு நடந்துகொண்டு வருகிறார்களா? எதிர்க்கும் பகைவர்களது வலிவானது அடங்கி ஒடுங்கும்படி அஸ்திர சஸ்திரங்களிலும் ஆனையேற்றம் குதிரையேற்றம் மல் வித்தை வில்வித்தை முதலானதுகளிலும் கைதேர்ந்த க்ஷத்திரியர்களெல்லாம் வீரதீர பராக்கிரம சூரர்களாய் விளங்குகிறார்களா? தானியாதிகளில் யாதொரு கலப்பிடம் முதலியவை பண்ணாமல் சுத்த சரக்குகளைச் சேகரித்து, சொற்ப லாபத்திற்கு சூது வாதில்லாமல் வைசியர்களெல்லாம் தர்ம மார்க்கமாக வியாபாரம் செய்து வருகிறார்களா? சூத்திரர்களெல்லாம் தங்களுக்கு ஏற்பட்ட கடமைகளில் தவறாமல் சரிவர நடந்து கொள்கிறார்களா? தெரிவிப்பாய் மந்திரீ!"—என்று தமது மந்திரியை நோக்கி விசாரித்தார்.

"ஆகா! பகவானது கடாட்ச விசேஷத்தால் அவாள் அவாள் தருமங்களில் அவாள் அவாள் எவ்வித குறைவு மில்லாதபடி சரிவர நடந்துகொண்டு வருகிறார்கள். ஆலயங்கள் தோறும் ஆறுகால பூஜை சரிவர நடந்து வருகிறது. பிரதிமாதமும்—மும்மாரி தவறாது பேய்ந்து வருகிறது. சிற்றரசர்கள் சரிவர கப்பம் கட்டிக்கொண்டு வருகிறார்கள். உங்களுடைய ராஜ்யத்தில் ஜனங்கள் எல்லாம் சந்தோஷமாக இருந்து வருகிறார்கள் பிரபுவே! அதைப் பற்றி தங்களுக்கு எவ்வித கவலையும் வேண்டாம்!" என்று பதிலுரைத்தார்.

பின்னர், நாடகக்கதையை ஆரம்பித்து இரண்டுமணி நேரம்வரை அரிச்சந்திர மகாராஜாவாக ஆடியும் பாடியும் சபையோரைக் களிப்பித்த அதே வேஷக்காரரே, 'ராஜா' என்ற ஹோதாவில் அல்லாமல் 'தெருக் கூத்தாடிகளின் தலைவர்' என்ற ஹோதாவில் நாட்டாண்மைக்காரர் அருகில் வந்து நின்று 'பணம்கொண்டாட' ஆரம்பித்து விட்டார். தெருக் கூத்துக்கு டிக்கட்டு விற்பனை மூலம் வருமானம் கிடையாததலின், அதைக் கண்டுகளித்த அவ்வூரிலுள்ளவர்கள் அக் கூத்தாடிகளுக்கு சம்பாவனை அளிப்பதை 'பணம் கொண்டாடுதல்' என்பது கிராம வழக்



---

"ஆன்மப் பயிராக்"கத்தின் உபயோகம் யாது? அதற்குப் பரிபூரணம் அளிக்கும் ஆன்ம அளவுகோல் ஒன்றுண்டு. அதன் உதவிகொண்டு அது ஐஸ்வரியத்தை ஒரு கருவியாகவே நம்மை மதிக்கச் செய்யும். அது செய்வதெல்லாம் "பொருள் எல்லாம் உபகரணங்களே" என்று சொல்லளவிலன்றி உண்மையாகவே உள்ளத்தில் அறியவும் உணரவும் தூண்டுவதாகும்.

கம். அவ்வூர் நாட்டாண்மைக்காரர், ஒரு குத்துவிளக்கருகில் வெற்றிலை பாக்குக் கூடையுடன் உட்கார்ந்து கொண்டார். அவரருகில் மற்றொருவர் பென்ஸிலும் காகிதமும் கொண்டு பணம் கொடுத்தவர்களின் பெயர்களைக் குறித்துக்கொண்டே வந்தார். (ஒரு பணம் என்பது இரண்டு அணாவைக் குறிப்பதாகும்) "அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகியாய் விளங்காநின்ற—இன்னும் மாம்பழப்பட்டு கிராமத்தில் கோயில் கொண்டிரா நின்ற துர்க்கையம்மனுக்கு இன்றைய இரவு நடைபெற்ற கேளிக்கையில் மாம்பழப்பட்டு கிராமத்தில் ஆயுராரோக்கியமாய் வாசம் செய்யாநின்ற கனம்பொருந்திய ராஜமான்ய மகாராஜராஜஸ்ரீ மணியம் கிராமமுனிசீப்பு அவர்கள் பேரால் கொண்டாடி வைக்காநின்ற ரூபாய் ஒண்ணு. ஷை யூரில் வாசம் செய்யாநின்ற மகாராஜராஜஸ்ரீ நாட்டாண்மை கருப்பண்ணக் கவுண்டர் அவர்கள் பேரால் கொண்டாடி வைக்காநின்ற ரூபாய் ரெண்டு"........

பின் அவ்வரிச்சந்திர வேஷதாசா, தனது தேவியாகிய சந்திரமதியம்மனை அழைத்து வரும்படி மந்திரிக்கு கட்டளையிட்டதும் பழையபடி சிலர் கூடி—துணியை திரையாக பிடித்துக்கொண்டு நின்றனர்.

சந்திரமதியம்மன் வேஷம் பூண்டவன் திரைக்குள் வந்துநின்று சில நிமிஷங்கள் பாடி யிருந்தபின், கடைசியில்

"கானகக் குயிலைப்போலும் கதிரொளி பணிகள் மின்ன
வான அம்புலி முகத்தாள் வஞ்சியர் கவரி வீச
மானினை ஒத்தமாது மல்லிகை முல்லை சூடி
மேனியும் பளபளென்ன மெல்லியும் வாராளிப்போ"

என்ற விருத்தத்தை நீட்டிப் பாடியபின்னர், அத்திரையால் தனது முகத்தை மட்டும் மறைத்துக்கொண்டு அதைப் பிடித்துக்கொண் டிருப்பவர்களும் தன்னுடன் வர முன்னும் பின்னும் அடகுபோட்டு ஆடியபின் திரைவிடப்பட்டதும், மதுரை மீனாட்சியம்மனைப்போல் கைகளை வைத்துக்கொண்டு நின்றான். பின்,

கந்தம் கதம்பம்பூசி கானக்குயில்போல் பேசி
விந்தை நற்பணி துலங்கவே—சந்திரமதியாம்
மெல்லியிதோ வந்து மேவினாள்
அன்ன நடையழகி மின்னல் கொடியுந் துன்ன
கன்னல் கிளியாளென்ன காந்திவடிவம் மின்ன
தா தய்யத்தோம் தரிகிட தை
வீசும் பணி சிங்காரி மின்னுமிடை ஒய்யாரி
வாச மலர்கள்சூடி வள்ளல் பதத்தைநாடி—சந்திரமதியாம்
மெல்லியிதோ வந்து மேவினாள்.

என்று அடகு தவறாமல் ஆடிப்பாடிய பின்,

---

இடுக்கண் அடையாதவனைப்போல இரக்கப்படத்தக்கவன் கிடையான். அவன் நல்லவனா தீயவனா என்று சோதிக்கப்படவில்லை. இயற்கையாகவே அமைந்த குணங்களுக்காக இறைவன் ஒருநாளும் முடிசூட்டுவதில்லை.

"அயோத்தியா புரி பட்டணத்தை தகத்தோடும் கூடி பரிபாலனம்



செய்து வாகின்ற ராஜாதி ராஜ கம்பீரனே! தங்களுடைய பொற்பாத விந்த கமலங்களுக்கு அடியாள் சந்திரமதி அநேககோடி வந்தனமையா சுவாமீ!"—என்று அந்த ராஜவேஷதாரியின் காலடியில் அமர்ந்தாள்.

அந்த ராஜவேஷதாரியும்,

"பாதமதைத் தான் பணிந்த
பத்தினியே வாழி வாழி!
ஆதரவாக என்றும் அரிவையரே
[சிரேழி
(சுருள்) அங்கம் குளிரவே மங்கை வாழ்ந்திரு
எங்கும் புகழ்பெற தங்கமே எழுந்திரு"

என்று ஆசீர்வதித்தான்.

* * *

குறிப்பு:—இக்கட்டுரையில் எவ்விஷயமும் மிகைப்படுத்தப் படவில்லை என்பதும், இன்றும் தமிழ்நாட்டுக் கிராமங்கள் தோறும் அடிக்கடி நடைபெற்றுவரும் 'நாடகங்கள்' இத்தகையனவே என்பதும் கிராமவாசிகள் அனைவரும் அறிந்தவையே. இத்தகைய நாடகங்களில் அறிவாளிகளால் பரிகசித்தற்குரிய விஷயங்கள் பற்பல காணப்படுகின்றனவாதலால், இவற்றைப் பார்ப்போர்க்கு இவற்றால் ஏற்படும் நன்மைகள் பத்துப் பங்கானால் தீமைகள் தொண்ணூறு பங்காக இருக்கின்றன. இதன் பயனாக, கர்நாடக நாடகத் துறையில் தற்சமயம் ஏற்பட்டுள்ள கேவல நிலைமை, பெரிதும் இரங்கத்தக்கதாக உளது. தமிழ்நாட்டில் பொது மக்களிடையில் கல்வியறிவு குன்றிய காலந்தொட்டு, நாடகத்துறையிலும் இத்தகைய கேவலநிலைமை ஏற்பட்டது போலும்! தற்காலத்தில் தமிழ் மக்களது கவனம் நவீன நாகரிக 'டிராமா'க்களில் சென்றுவிட்டிருத்தலால், கர்நாடக நாடகங்களைச் சீர்திருத்துவதில் சிரத்தை எடுத்துக்கொள்ள எவரும் முன்வராது போயினர். பரிகசிக்கத் தகுந்த விஷயம் ஏதேனும் நடைபெற்றால், 'இது என்ன தெருக்கூத்தா?' என்று கேட்பது பழமொழிபோல் வழங்கி வருகிறது! தெருக்கூத்துகளில் காணப்படும் தேசவிசாரணை கணவனிடத்தில் மனைவி காட்டும் பணிவு முதலிய அம்சங்கள் ஓரளவு மகிழ்வூட்டுவனவே. எனினும், நாடகத்திற்குப் பொருத்தமில்லாத—பார்ப்போரது நல்லொழுக்கங்களையும் பாதிக்கக்கூடிய விஷயங்களே தெருக்கூத்துகளில் பெரும்பான்மையும் காணப்படுகின்றன.

---

நாம் உண்மை என்று நம்புவதை ஒப்புக்கொள்ள மறுப்பவரை நாஸ்திகர் என்று கருதுவது பெருந் தவறு. இழிவான நோக்கங் கொண்டு உண்மைக்குச் செவி சாய்க்க மறுப்பவரே நாஸ்திகர். சமயக் "கோட்பாடுகளை" எல்லாம் நம்புவதாய்க் கூறிக்கொண்டு சமய "ஒழுக்கம்" இல்லாதவன் நாஸ்திகரில் நாஸ்திகன்.

விதூஷகனது ஸ்தானத்தில் இருந்துகொண்டு நாடக ஆரம்பம் முதல் முடிவுவரை—இடையிடையில்—சமயா சமயங்களைக் கவனியாமல் தான் விரும்பும் எந்தச் சந்தர்ப்பத்திலும் 'எவ்விதமேனும் நாடகம் பார்ப்போரை நகைக்கச் செய்யவேண்டும்' என்னும் ஒரு நோக்கத்தையே உடையவனாக வாயில் வந்தவாறெல்லாம் மிக்க ஆபாசமாகப் பாடிக்கொண்டும் பேசிக்கொண்டுமிருக்கும் கட்டியக்காரனால் விளையும் தீமைகள் பற்பல. 'நகைச்சுவை'க்கும் ஓரளவு உண்டென்பதும், தாம் விரும்பும் போதெல்லாம் சோகரஸமுடைய காட்சிகளில்கூட விகடம் செய்ய முன்வருவது சிறிதும் பொருந்தாதென்பதும், ஆபாசமாகப் பாடுவதாலும் பேசுவதாலும் அவற்றைக் கேட்கும் சிறுவர்களது ஒழுக்கங்கள் கெடும் என்பதும் ஒவ்வொரு கட்டியக்காரராலும் கவனிக்கத் தக்கனவாம். அவர்களைச் சீர்திருத்தி அவர்களது விகடங்களை ஒரு வரம்புக்கு உட்படுத்த வேண்டுவது அதிமுக்கியமாகும்.

பண்டைக்காலத்தில் தர்பாரில் வந்தமரும் அரசர்கள், தற்காலத் தெருக்கூத்தாடி மன்னர்களைப்போல் அடங்குதவறுமல் ஆடிப்பாடிக் குதிப்பதும் தமது கீர்த்திப்பிரதாபங்களையும் தம்மீது விளங்கும் திருவாபரணங்களையும் பற்றித் தாமே தற்புகழ்ச்சி செய்து கொள்வதுமாயிருந்தால், அத்தகைய அரசர்களை அவர்களது குடிமக்கள் எவ்வாறு மதித்திருப்பார்களென்பதைச் சிறிதேனும் சிந்தித்துப் பார்த்தாலும், பண்டைய அரசர்கள்மேல் அத்தகைய பரிகசித்தற்குரிய இழிவுகளைச் சாட்ட எத்தகைய தெருக்கூத்தாடியும் துணியமாட்டான் என்பது உறுதி. அத்தகைய சிந்தனைக்குச் சிறிதளவும் இடம் தராவாறு அவர்களது அறிவு மறைக்கப்பட்டிருப்பதன் காரணம், அவர்கட்குப் போதிய கல்வியறிவின்மையேயாம். அவர்களது பாட்டுகளிலும் வசனங்களிலும் பரிகசிக்கத் தக்கவாறு மலிந்து கிடக்கும் பிழைகளை ஆராயப்புகுவது, மணல் சோற்றில் கற்கள் ஆராயப்புகுவதை ஒக்கும்.

செந்தமிழ்நாட்டுச் சீர்திருத்த வாதிகளே! நகர்ப்புறப் பிரசாரத்தைவிட நாட்டுப்புறப் பிரசாரம் எளிதில் பெரும்பயன் தருவதாகும் என்பதைக் கருத்தில் இருத்துங்கள். தற்காலத் தெருக்கூத்தாடிகளின் நாடகங்கள், கிராமவாசிகளை எந்நிலையில் வைத்திருக்கின்றன என்பதைச் சிறிதே சிந்தித்துப் பாருங்கள். பார்ப்போர்க்கு நல்லுணர்ச்சி உண்டாகி அவர்கள் தாமே சீர்திருந்தும் வகையில்—சிறந்தமுறையில்—தக்க நடிகர்களைக்கொண்டு கூடியவரை பிழைகளின்றி நடத்தப்படும் நாடகங்களால் கிராமவாசிகள் எவ்வளவோ நலம் பெறுவார்கள்! முத்தமிழில் ஒன்றாகிய நாடகத்தமிழுக்கு தற்காலத் தெருக்கூத்தாடிகளால் ஏற்பட்டுள்ள பெரும் இழுக்கைப் போக்குவது தமிழ்த்தாயின் முன்னேற்றத்துக்குரிய சிறந்த தொண்டுகளில் ஒன்றாதலின், அப்பணியில் தலைப்பட்டு உழைக்க முன்வருமாறு அன்பர்களைப் பெரிதும் வேண்டிக்கொள்ளுகின்றேன். திருவருள் முன்னிற்க.



---

மூளையின் முன்புறம் (அறிவு) பின்புறத்தை (உணர்ச்சியை) உறிஞ்சி உலர்த்திவிடுமானால் கேடே. அறிவினால் மட்டுமே நன்மை பெற்றுவிட முடியாது. விசாலமான நெற்றிக்கே எப்பொழுதும் இறுதியில் வெற்றி. ஆனால் வெற்றி கிடைப்பது தலையின் பின்புறம் மிகப் பருமனாயுள்ளபொழுதே.

# கடவுள்

(டர்பன், சாஸ்வதி சபைத்தலைவர்.
திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை அவர்கள்.)

நம்முடைய கட்புலனுக்கு விஷயமாகும் இவ்வுலகத்தையும் அதன் கண் அமைந்துள்ள பலவித அற்புதமான அமைப்புக்களையும், அவ்வவற்றின் சனன மரண வியற்கை யனுபவங்களையும் நோக்குமிடத்து புகையைக் கண்டவழி நெருப்பிருத்தல் ஊகிக்கப்படுமாறு போலவும், குட முதலிய காரிய முண்டாவதற்குக் குயவனாகிய நிமித்த காரணன் ஒருவன் உண்டாயிருத்தல் போலவும் இந்தப் பிரபஞ்சம் சிருட்டி, திதி, சங்காரம் என மூத் தொழில் படுதலால் அக்காரியம் உண்டாவதற்கு நிமித்த காரணனாகிய ஈசுவரன் ஒருவன் உண்டென்றும், மண்போல் மாயையாகிய முதற் காரணம் உண்டென்றும், தண்ட சக்கரம்போல நல்வினை தீவினைகளாகிய துணைக் காரணங்கள் உண்டென்றும், ஆன்மாக்கள் பந்த மோட்சத்தை யடையும்படி இவ்வாறு காரியப் படுமென்றும் அனுமானப் பிரமாணத்தாற் கொள்ளப்படும்.

அப்படியாயின் ஈசுவரனன்றி மற்றைய மூலப் பிரகிருதியாகிய மாயையினாலும், பரமாணுக்களினாலும் அறிவுடைய சீவர்களால் உலகம் உண்டா யிருக்கப்படாதோ வெனின், ஒரு தேரைச் செய்வதற்குப் பற்பல வேலைக்காரர்கள் வேண்டி யிருப்பினும், இரதாசாரியனாகிய ஒருவனாலேயே அந்த இரதம் உண்டாயிருக்கிறதினாலும், உலகத்தை யுண்டாக்குகை யாகிய காரியம் மிகவும் பெரிதாகையானும், அச் சீவர்களிடத்தில் கிஞ்சிஞ்ஞத்துவம் (சிற்றறிவுடைமை) முதலிய தோஷம் உண்டா யிருக்கையானும், அச் சீவர்களால் உலகம் காரியப் படமாட்டாது. ஆகையால் பிரபஞ்சத்திற்கு சர்வஞ்ஞன் (முற்றறி வுடையவன்) ஈசுவரன் ஒருவரே சர்த்தாவாகின்றார் என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாம்.

மேலும், சூரியனா லன்றி மலர்கின்றவை மலரவும் குவிகின்றவை குவியவும், உருகுகின்றவை உருகவும், இளகுகின்றவை யிளகவும், இறுகுகின்றவை இறுகவுங் கூடாததுபோல் அகில வுலகங்க ளெல்லாந் தங் காரணனாகிய ஈசுவரனையன்றிக் காரியப்படமாட்டா.

நண்பர்காள்! பின்னும், அறுகம் புல் நுனியில் தங்கிய பனித்துளி யளவாகிய சுக்கிலமானது காசாணுதி யவயவங்களாக உருப்பட்டு, உயிர்பெற்று எண் சாணுடம்பில் ஒரு சாணளவாகிய தாய் வயிற்றில், இரைப்பை, மலப்பை, சலப்பை முதலிய விடங்களுந் தவிர, மிகவும் சிறிதாகிய கருப்பாசயப் பையினிற் கட்டுண் டிருந்து, அதனால் உறுத்தப்பட்டு, உதராக்கினியில் வெந்து, அவ்விடத்தில் பூரிக்கும் சலத்தி லமிழ்ந்து, ஒருநாள் இரண்டு நாளா? மூந்நூறு நாட்டங்கி யிருந்து பிறகு பிரசூத வாயு முறித்துத் தள்ள சிசு உற்பவிக்

கின்ற அதிசயத்தை என்னென்று சொல்லுவோம். இவ்வண்ண மியற்றுநர் யார்? அவரே யன்றோ கடவுள்? அவருடைய ஆற்றலன்றோ அளவிலாற்றல்.

இனி விளாங்காய் திரண்டிருப்பதும், பால் வெளுத்திருப்பதும் இயல்பு (Nature) தானே யென் றெழும் ஆசங்கைக்குச் சமாதானம் கூறுவாம். காரணத்திலிருந்து காரிய முண்டாகிறதே யொழிய, நிஷ்காரணமாக உண்டாகாமையான் சுவாபம் (Nature) என்பது கூடாதாதல் காண்க! குலாலன் நிமித்தத்தா லன்றிக் குடம் உண்டாகின்றதா? சூத்திரதார னின்றிப் பதுமை யாகுமா? சாரதியின்றி இரதம் நகருமா? இன்னும் வித்தில்லாமல் விளைவில்லை என்றும், அவனன்றி யோரணுவு மசையாது என்றும் இருப்பதினால் எல்லாம் தெய்வச் செயலே என்று ஒப்புக்கொள்ள வேண்டி யிருக்கிறது.

இத்தியாதி காரணங்களினாலே பொதுமறையுள்ளும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்று கூறப்பெற்றது.

இனி, கடவுளை யாங் கண்கூடாக் காணுதலில்லே மென்னும் புல்லறிவாளர் கூற்றைத் தாய் தந்தையர்களை யறியாத மைந்தன் ஒருவன் தன்னைப் பெற்றவர்களைத் தானறியாததனால், நான் அந்தரத்தில் முளைத்து வந்தே னென்னும் பேதை மொழிபோலு மென்க.

நிற்க, கடவுளைக் குறித்துண்டான சாதனம் இதுவென வாராயு மிடத்து வேதமே யெனப்போதரும். அவ்வேதம் நான்கு வகையாய் அநந்த சாகைகளை யுடையது.

வேதத்தைச் சிலர், ஈசுவரனால் பிரமனுக்குக் கூறப்பெற்று, பிரமனால் மற்றையோர் வழி வழியாக வுலகிற்கு வந்தது என்பர். சிலர் சுயம்பு அதாவது தானே யுண்டாயது என்பர். இனி இவ் வேதம் தலைவ னின்றித் தானே தோன்றி யிருப்பினும், தானே தனி முதலாயியங்குந் தற்பரனாலே தரபெற்றிருப்பினும், இருமையுஞ் சிறப்புடைத் தன்றி யிழுக்காமாறில்லை யென்க. ஆயினும், கடவுளை வேத சொரூபி யென்றும், அநாதியே யுள்ளவரென்றும், கூறப்படுதலால் கடவுள் வேதம், வேதம் கடவுள் எனக் கொள்ளலாம்.

அவ்வேதம் தன்னுள் யாவற்றையும் மறைத்து வைத்திருப்பதினால் மறை என்றும், பல தர்மங்களையும் அறியக் கருவியா யிருப்பதினால், வேதம் என்றும், ஓதப் பெறுதலால் ஒத்தென்றும், கேட்கப்படுதலால் சுருதி என்றும், எல்லா நூற்கும் முந்திய தாகையால் ஆதி நூல் என்றும், மெய்ப்பட் டிருப்பதால் மெய்ந் நூலெனவும், பற்பல காரணங்களால் ஆரணம் என்றும், எழுதாக்கிளவி என்றும், நிகமம் என்றும் பெயர் பெற்றுள்ளது. இத்தகைய பெற்றியமைந்த வேதத்திலே உலக காரணன் கடவுளென்று பறை சாற்றப்பெற்றிருக்கிறது.

இதுகாறுங் கூறிப்போந்தவாற்றா னிவ்வண்டாண்ட சராசரங்கட்கு எல்லாங் காரணனாய்க் கண்டறியப் படுபவரே கடவுள் என்றும், அந்தக் கடவுள் அறிவு சொரூபமாயும், ஆநந்த மயமாயும், கிருபா சமுத்திரம்போன்று அளவிலாத் தம் அருட் சக்திகளோடும் ஆனந்தத் தாண்டவங் குயிற்றி யருளும் சிவ

---

அரனைவணங்கி யருள்பெற விரும்பு.

பெருமானே யாவர் என்றும் அறிய முடிந்ததன்றோ? இவரை வழிப்படும் சமயம் சைவ சமயமெனப்படும். இதுவே மெய்ஞ்ஞான சமய மென்பதை

"சைவத்தின் மேற்சமயம் வேறிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு மின்மறை"

என்றவான்றோர் வாக்கா னினிதுணர்க.

சிவபெருமான் எவ்வெவர் சிந்தையினில் எவ்வெவ்விதமாய்த் தியானிக்கின்றனரோ அவ்வவ் வுருவத்தோடு வந்து அருள் புரிவாரென்பதை, அங்ஙனம் தியானித்து அருள்பெற் றுய்ந்த உண்மை நாயன்மார்களாகிய திருத்தொண்டர் புராணம் முதலிய சைவ புராணங்களிலே காண்க.

பின்னர், நம்மையெல்லாம் படைத்து இரட்சித்துவரும் முழு முதற் கடவுளாகிய சிவபிரான் நமக்குண்டாயிருக்கிற ஒவ்வொரு அவயவமும் நாம் அவரை வழிபட்டுய்ய வேண்டிய காரியங்கட் கெல்லாம் உதவித் துணையாயுள்ளது. ஆகவே, அவயவங்களி லெல்லாம் சிறந்த சிரத்தினு லவரை வணங்கியும் கண்ணினுலவர் திருக்கோவில் கொண்டுள்ள மூர்த்தங்களையும், திருவிழாக்களையும் கண்டு களித்தும், வாயினுலவரை நாவாரத் துதித்தும், செவிகளினு லவர் புகழைக் கேட்குந் தோறும் சலியாது கேட்டும், கைகளினுல் அஞ்சலி செய்தும், புட்பம்கொண்டு அருச்சித்தும், கால்களா லவர் திருக்கோயில் கொண் டெழுந்தருளியுள்ள திவ்விய தலங்கட்குச் சென்றும் தரிசித்துய்ய வேண்டுமென்பதுகொண்டே, ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் தம் மருமைத் திருவாக்கினுல், "தலையே நீ வணங்காய்" என்றது முதற்கொண்டு "இறுமாந் திருப்பன் கோலோ வீசன்பல் கணத் தெண்ணப்பட்டு" என்பது முள்ளதாய திருவங்க மாலையைப் பாடி யருளினு ரென்க.

ஆகவே, சிவபெருமா னருளின்றி, யாது நலனு மெய்தாது, பிறவியிற் கிடந்துழல வேண்டிவரும். ஆகலின், அவனருள் பெறவேண்டுமானுல் சாத்திரங்களிற் கூறியுள்ள சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கையும் வழுவாது நடாத்தல் வேண்டும். இந்நான்கும் ஒன்றற்கொன்று சோபானக்கிரமமாக (படித்தரமாக) உள்ளது. இதனை,

"விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்பு மலர் காய்கனி போலன்றோ பராபரமே"

என்றுள்ள தாயுமானவர் வாக்கினுற் பெறப்படும். பூவாது காய்த்துப் பழுக்குமாமுள்ளது போலச் சிலர் ஞானியாகவே பிறக்கிறுர்களே யெனில், அதற்கும்,

"யோகியர்க்கே ஞானமொழுங்காம் பேரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே"

எனப் பாடி யுள்ளார்.

இனி, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் அனுஷ்டிப்பவர்கள் முறையே சாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதவியை யடைவரென்பது திண்ணம். ஆகவே நாமும் எல்லாம் வல்ல இறைவனுகிய சிவபெருமானை, மனமொழி மெய்களினுல் இடையறுது சிந்தித்து வந்திப்போமாக!

---

உள்ளதை ஒளித்தாற் கள்ளனுவான்.




# தமிழ் அகராதியின் வரலாறு.

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ. பி. எல்.)

இவ்வுலகில் வழங்கும் செம்மைசான்ற தொன் மொழிகளுள் ஒன்றாய தமிழ் மொழியைச் சென்ற இருநூறாண்டுகளாகப் பிற நாட்டு நல்லறிஞர் போற்றி வளர்க்கத் தலைப்பட்டார்கள். இத்தகைய அறிஞருள், இத்தாலியா நாட்டினின்றும் தமிழகம் போந்து, தமிழ் மக்களோடு கலந்துறைந்து, விழுமிய புகழ்பெற்ற வீரமா முனிவரே தலை சிறந்தவராவார். மேலை நாட்டுச் செம்மொழிகளிலமைந்த செழுங்கலைகளைச் செவ்வையாய் ஓதியுணர்ந்து செவிச் செல்வம்பெற்ற இம்முனிவர் அருந்தமிழ் மொழியின் அகலங்காண விரும்பிப் பல்லாண்டு முயன்று பயின்றார். தாளுண்ட நீரைத் தலையாலே தரும் தெங்கின் தகைமை வாய்ந்த இம்முனிவர் தமிழ் மொழிக்கு ஆற்றிய பணி அருமை சான்றதாகும்.

தைரியநாதர் என்றும், வீரமா முனிவர் என்றும் தமிழகத்திற் புகழ்பெற்ற இவ்வறிஞரே, தமிழகராதியின் தந்தையாவார் என்று கூறுதல் மிகையாகாது. தமிழ் மொழியில் அமைந்த சொல்லின் பொருளை அறிந்துகொள்வதற்கு முற்காலத்தில் நிகண்டுகளே சிறந்த கருவியாயமைந்தன. பிங்கலம், திவாகரம், சூடாமணி, ஆசிரியம், கயாகரம் முதலிய பல நிகண்டுகள், தமிழ் மொழியில் விளங்கக் காணலாம். இந்நிகண்டுகள் யாவும் நூற்பாவால் அமைந்திருந்தமையால், அவை கற்றோர்க்கே யன்றி மற்றோர்க்குப் பயன்படாதனவாயின என்பது சொல்லாமலே அமையும். கவிபாடும் புலவர்க்கும் பொருள் தேரும் அறிஞர்க்குமே, இவை பெருந் துணையாயிருந்தன. கற்றோரே யன்றி மற்றோரும் தமிழின் நீர்மை யறிந்து தழைத்தோங்க வேண்டுமென்று கருதிய வீரமா முனிவர் 'சதுரகராதி' என்னும் பெயரால் ஓர் சிறந்த அகராதி செய்து உதவினார். இவ்வகராதி நூற்பாவால் அமைந்த நிகண்டுகள் போலாது, தமிழ்ச் சொற்களை அகரமுதலாக எடுத்தடக்கிப் பொருள் விளக்கிய பாண்மையால், தமிழ்ப் பெருங் கடற்கு அஃது ஓர் மரக்கலமாகத் திகழ்ந்ததென்று அந்நூற்பாயிரம் எடுத்துரைக்கின்றது. இவ்வகராதி அளவிற் சிறியதாயினும், அருமை மிக வாய்ந்ததென்பதில் ஐயமில்லை. பிற்காலத்தில் தமிழில் எழுந்த பேர் அகராதிகட்கெல்லாம், 'சதுரகராதி'யே கலங்கரை விளக்கம்போல் நின்று நெறிகாட்டும் தகைமை யொன்றே அதன் பெருமைக்குப் போதிய சான்றாகும். பெயர், பொருள், தொகை தொடை யென்னும் நான்கு பகுப்புடையதாய் நலமுறத் திகழும் இவ்வகராதி பதினெட்டாம் நூற்றாண்டில் எழுந்ததாகும். சதுரகராதியை அடிப்படையாகக் கொண்டு தனித் தமிழ் அகராதிகளும், தமிழ் ஆங்கில அகராதிகளும் எழுந்தன. இவ்வாறு தமிழ்

மொழியில் எழுந்த அகராதிகள் பலவாயினும், கற்றுவல்ல புலவர்க்கும், கலை பயிலும் மாணவர்க்கும் உற்றதுணையாய் நின்றுதவும் தமிழகராதி மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் வெளியிட்டுள்ள சொல்லகராதியேயாகும். சொற்பொருள் விளக்குதலோடு, அச்சொல் மேலோர் வாக்கில் மிளிரும் பான்மையை எடுத்துக்காட்டும் முறை அருந்தமிழ் அறிய விரும்புவோர்க்குப் பெரும்பயன் விளைப்பதாகும்.

இனிச் சதுரகராதியைத் துணைக்கொண்டு இந்நாட்டில் எழுந்த தமிழ் ஆங்கில அகராதிகளின் வரலாற்றைச் சுருக்கமாக ஆராய்வோம். இற்றைக்கு நூறாண்டுகளுக்கு முன்னரே, இத்துறையில் உலையா ஊக்கம்கொண்டு உழைத்த மேலை நாட்டறிஞராய ராட்லர் என்பார்க்கு ஆங்கில உலகும் தமிழுலகும் மிகுந்த கடப்பாடுடையனவாகும். விவிலியநூல் பரப்பும் விழுமிய நோக்கத்துடன் இந்நாட்டில் நிறுவப்பெற்ற 'வேதமட'த்தைச் சார்ந்த ராட்லர் என்னும் நல்லறிஞர், பல்லாண்டுகளாகத் தமிழறிந்தோரைத் துணைக்கொண்டு உழைத்து ஓர் தமிழ் ஆங்கில அகராதி தொடுத்தார். ஆயினும் அவ்வகராதியை அச்சிட்டு வெளிப்படுத்தும் முன்னமே, அவர் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார். பல்லாயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களைப் பிழையற ஆராய்ந்து, அவற்றின் பொருளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் விளக்கிப்போந்த இவ்வறிஞரது ஆர்வம் அளவிடற் பாலதன்றாம். இவ்வகராதி நான்கு பகுதிகளாக வேதமடத்தினரால் 1836-ம் ஆண்டு முதல் வெளியிடப் பெற்றது.

இவ்வகராதியைத் தழுவி, விரிவாக எழுந்த வின்சுலோ அகராதியே, இன்றுகாறும் சிறந்த தமிழ் ஆங்கில அகராதியாக நின்று நிலவுகின்றது. அமெரிக்கர் மடத்தின் ஆதரவில் எழுதப்பெற்ற இப்பேர் அகராதியைப் பதிக்கும் பொறுப்பும் பெருமையும் வின்சுலோ என்னும் மேலை நாட்டறிஞர்க்கு வாய்த்தது. எடுத்த கருமத்தைத் தொடுத்து முடிக்கும் மனத்திண்மை வாய்ந்த இவ்வறிஞர், பல்லாண்டு பணி செய்து, கைப்பொருளின்றிக் கவன்று, ஒன்பதாண்டகவையில் அகராதியை அச்சியற்றி முடித்த வரலாறு அதன் பாயிரத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. 1853-ம் ஆண்டில் அச்சேறிய அகராதியின் செலவு அளவு கடந்து சென்றமையால், அமெரிக்க மடத்தார் அதன் பொறுப்பை யேற்று நடத்த இயலாது தளர்வுற்றார். மூந்நூற்றறுபது பக்கம் அச்சேறி முடிந்த அளவில் அகராதி வேலை முறிந்துவிடுமோ என்னும் அச்சம் பிறந்தது. சென்னை அரசாங்கத்தார் உதவியை ஆசிரியர் வின்சுலோ நாடிய பொழுது, அவர்கள் முன்னரே வாக்களித்திருந்த முறைமையில், அகராதி முற்றுப் பெற்ற பின்னர் நூறு பிரதிகள் விலை கொடுத்து வாங்க இசைந்தனரே யன்றி முன் பணம் கொடுத்துதவ முற்பட்டாரல்லர். எஞ்சி நின்ற பகுதிகளை அச்சிட்டு முடித்தற்குப் பின்னும் பல்லாயிரம் ரூபா இன்றியமையாதிருந்தமையால், பங்கொன்றுக்கு இருநூறு ரூபாவாக எழுபது பங்குகள் சேர்த்து, அத்தொகையைக் கொண்டு அகராதியை முற்றுவிக்க ஆசிரியர் வின்சுலோ முயன்றார். ஆயினும் இவர் கருதியவாறு பங்குகள் விலைப்படாமையால், கடன்கொண்டும் செய்வன செய்தலே நன்றென்று கவிஞர் கூறி யாங்கு ஐயாயிரம் ரூபா கடன்பட்டு ஆசிரியர் அகராதியை அச்சிட்டு வெளிப்படுத்தினார். இவ்வாறு ஊதியமின்றி அரிய உழைப்பினை நல்கிய மேலை நாட்டறிஞரது ஊக்கமும் தியாகமும், நம்மனத்தைக் கவர்ந்து நன்றியை யெழுப்புவதாகும்.

இனி, இப்பேரகராதியைப் பின்பற்றிச் சென்னைச் சர்வகலா சங்கத்தின் ஆதரவில் ஓர் புதிய தமிழ் ஆங்கில அகராதி வெளியிடப்பட்டு வருகின்றது. இப்புதிய அகராதியின் வரலாற்றையும் சுருக்கிக் கூறுதல் பொருத்தமுடையதாகும். இற்றைக்கு ஏறக்குறைய எழுபதாண்டுகளுக்கு முன்னர் எழுந்த வின்சுலோ அகராதியின் அருமை யறிந்த சென்னை அரசியலாளரும், ஏனைய அறிஞரும், அதனைப் புதுக்கி அச்சிட்டாற் பெரும்பயன் விளையும் என்று கருதினர்கள். அவ்வகராதியின் முதற் பதிப்பு முழுமையும் சில ஆண்டுகளிற் செலவாகிவிட்டமையால், அதன் பிரதிகள் கிடைத்தல் அரிதாயிற்று. அகராதியின் பதிப்புரிமை அமெரிக்க மடத்தார் உடைமையாக அமைந்திருந்தது. இரண்டாம் பதிப்பை ஏற்று முடித்தற்குப் போதிய பொருள் அம்மடத்தாரிடம் இல்லை. அன்றியும் 67,000 சொற்களுக்குமேல் அடங்கிய அகராதியைப் புதுக்கி அமைத்தற்குரிய புலமைசான்ற பதிப்பாளரும் கிடைப்பதரிதாயிருந்தது. இவ்வாறு போதிய ஆர்வமிருந்தும், பொருளாக்கமின்றி, ஏக்கற்று நின்ற நிலையினைச் சீமையில் வாழ்ந்த போப்பையர் அறிந்தார். பல்லாண்டு தமிழ் நாட்டில் உழைத்துப் பழுத்த முதுமையுற்றுச் சீமைக்குச் சென்று, இழுமென் மொழிகளாலியன்ற விழுமிய திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து ஆறுதலுற்றிருந்த அருந்தமிழ்த் தொண்டராய போப்பையர் இக்குறையை யறிந்து மனங்குழைந்தார். இமிழ்திரைக் கடல் கடந்து மீண்டும் தமிழ் நாட்டிலுறைந்து பணி செய்தற்குரிய உடல் நலமற்றிருந்த இவ்வையர், தமிழ் அறிந்த தக்கார் ஒருவரைத் தம்பால் அனுப்பக்கூடுமாயின், வின்சுலோ அகராதியைத் தாமே புதுக்கியும் விளக்கியும் எழுதித் தருவதாகச் சென்னை அரசாங்கத்தாருக்கு அறிவித்தார். அவர் எழுதிய நிருபத்தைச் சென்னை அரசாங்கத்தாரும், சர்வகலா சங்கத்தாரும் ஆராய்ந்து முடிவு செய்வதன் முன்னரே 1907-ம் ஆண்டில் போப்பையர் ஆவிதுறந்தார். ஆயினும் தமிழ் மொழியின்பால் வைத்த தலைபாய அன்பினால், ஐயர் ஆதரித்துத் தொகுத்திருந்த அருந்தமிழ்ப் பெரும் பொதிகள் அனைத்தையும், அவர் புதல்வர், சென்னையிலமைந்துள்ள கீழ்நாட்டுக் கையெழுத்து நூல்நிலையத்திற்கு (Madras Oriental Manuscripts Library) அன்பு கூர்ந்து அனுப்பிவைத்தார். அப்பொதிகளில் அமைந்த குறிப்புக்களை ஆராய்ந்த தமிழ்ப்புலவர்கள், புதியதோர் அகராதி வெளியிடுதல் அவசியமே யென்று சென்னை அரசாங்கத்தாருக்கு அறிவித்தார்கள். அப்பொழுது தென்னாட்டில் வதிந்த சாண்ட்லர் என்னும் ஆங்கிலப் பாதிரியார் ஒரு செவ்விய முறை வகுத்து, சென்னை அரசியலாளர்க்கு அனுப்பினர். அரசாங்கத்தார் அம்முறையை ஆதரித்துப் புதிய அகராதி அச்சிடும் வகைக்கு நூறாயிரம் ரூபா உதவ இசைந்தார்கள். ஐந்தாண்டளவில் முற்றுப் பெறுமென்று அரசாங்கத்தார் கருதிய பேரகராதி 1913-ம் ஆண்டு தொடங்கி இன்றளவும் இடை யீடின்றி நடந்துவருகின்றது. ஒன்பதாண்டுகள் இதன் பதிப்பாளராய் அமர்ந்து பணி செய்த சாண்ட்லர் என்பார், எழுபதாம் வயதில் இளைப்பாறக் கருதி வேலையினின்று விலகிக் கொண்டார். இப்பேரகராதியின் உரிமையை அரசாங்கத்தார் சென்னைச் சர்வகலாசாலைக்கு அளித்துள்ளார்கள். பதினெண்மர் அடங்கிய ஒரு கழகத்தினரால் இப்பொழுது அகராதி வேலை கண்காணிக்கப்பெற்று வருகின்றது. பல்லாயிரம் ரூபா செலவு செய்து பல்கலைக் கழகத்தின் ஆதரவில் வெளியிடப்படும் இவ்வகராதி பழுதற இயற்றப்பெறுமாயின் பெரும் பயன் விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை.




# வியாஸ பாரதமும்-வில்லி பாரதமும்

(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

மகா பாரதம் என்னும் பெயருடைய புராதன நூல் ஒன்றே உலகத்தில் வெளிவந்திருக்கும் எல்லா நூல்களையும்விட விரிவுள்ளதென்பது துணிபு. இத்துணிபு வியாஸ பாரதத்தினால் தான் உறுதிப்படலாம். "கன்றியவயிரிகள் காதும் காதையாகவே" பெரும்பாலும் வழிநூல்களாக வெளிவந்துள்ள தமிழ்ப் பாரதங்கள் கொள்ளப்படுவதியல்பு.

முதல்நூலாகிய வியாஸ பாரதத்தில் கதாநாயகர்களின் சம்பந்தமான அம்சங்கள் பத்தில் ஒரு பங்குகூட இடம்பெறவில்லை. தருமம், அரசியல் முறை, உலகத்தோற்றம், ஆன்ம விலக்கணம், கடவுட்டன்மை, மெய்யுணர்வு பெறும் தன்மை, தவவலி, மஹாத்மாக்களாக விளங்கிய பாரதநாட்டுப் பெரியோர்களின் வரலாறு முதலிய இன்னம் பலபல அரிய பெரிய விடயங்களாலேயே மிக மிக விரிவுற்றிருக்கிறது. பலனை விரும்பாமல் கர்மம் செய்தல் வேண்டியதாகிய நிஷ்காமிய பிரவர்த்தியையும் அதற்கநுகுணமான பக்தி, ஞான, யோக மர்மங்களையும் உலகிற்கருளிய கீதையைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் பெருமையொன்றே பாரதத்தை அரியாதனத்தில் அமர்வித்ததாகும். உலகச் சிரேஷ்டர்களான லோகமான்யரும் மகாத்மா காந்தியடிகளும் தங்கள் இதயங்களில் முதன்மையாகக் கொண்டு ஆறுதலும் இன்பமும் பெறக் கீதையே காரணமாய் விளங்கியதென்னில் பிற சிறப்பும் வேண்டுமோ?

பொதுவாக உலகில் மனிதருக்கிருக்க வேண்டிய உத்தம குணங்களுக்கும், வைராக்கிய வன்மைக்கும், கலைப்பயிற்சிக்கும், தத்துவ ஞானத்திற்கும், உதாரச் சிறப்பிற்கும், நட்பின் திண்மைக்கும், ஒழுக்கப் பயிற்சிக்கும், ஒற்றுமையின் பெருமைக்கும், புஜபலத்திற்கும் தவ உறுதிக்கும், நிகரில்லாத துன்மார்க்கத்திற்கும், சுயநலத்திற்கும், வஞ்சத்திற்கும், மோசம் பேராசையாகிய கீழ்மைக் குணங்கள் அனைத்திற்கும் தனித்தனி ஒவ்வொருவரைச் சித்தரித்துக் காட்டியுள்ள மிகமிகப் பெரியதும் சிறந்ததுமான இக் காவியத்திற்கிணையாக வரையப் பட்டுள்ளதொரு எழுத்தோவியம் எத்தேசங்களிலும் இராதென்பது திண்ணம். தர்மமும் அதர்மமும், பொறுமையும் கோபமும், இன்பமும் துன்பமும்,

---

நாம் அறநெறியில் நிற்கும் ஒவ்வொரு சமயத்திலும் ஏதேனும் இன்பம் அதிகரியாவிடில், ஏதேனும் துன்பம் குறைந்திருக்கும் என்பது உறுதி.

பாவமும் புண்ணியமும் ஒன்றையொன்று முழுவலியுடன் எதிர்ப்பதென்பதும் முடிவில் தர்மமே ஜெயம் பெறுமென்பதையும் அதர்மம் நசிக்கும் என்பதையும் முடித்துக் காட்டிய சான்றே பாரதமெனல் நுண்ணறிவாளர் துணியத்தகும். இடையிடையே காலக்கிரமத்தில் இதனைக் கையாளும் வாய்ப்பு நேரப்பெற்ற பலரின் விருப்பத்திற் கேற்பப் பல பல இடைச் செருகல்களும் கதை மாற்றங்களும் விரவியதில் வியப்பொன்றுமில்லை.

நிகழ்கால வர்த்தமானங்களைக்கூட உள்ளதுள்ளபடி கொள்ள முடியவில்லை யென்பதும், கூட்டல் குறைத்தல் ஏற்படுகின்ற தென்பதும் அநுபவம். அவ்வாறிருக்க ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எழுந்த நூலொன்றில் பெரும் பெரும் மாறுபாடுகள் இடம் பெற்றிருக்கக் கூடுமென்பது சர்வ சாதாரணம். எனினும் எல்லாப் பாஷைகளிலும் உரைப் பகுதிகளை மாற்றுவதுபோல் செய்யுட் பகுதிகளில் மாற்ற முயல்வது எளிதல்ல. அதிலும் வியாஸ பாரதச் சுலோகங்கள், வடமொழியில் விசேஷ பாண்டித்யம் பெற்றவர்கட்கே பொருள் தெளியக்கூடியதாக அமைந்துள. தற்காலத்திலும் அம் மொழிப் புலமையாளர்களில் பலரும் வான்மீகி பகவானால் இயற்றப்பட்ட ராமாயண சுலோகங்கட்குப் பொருள் விரிக்க முந்துவர். ஆனால் வியாஸ பாரதத்திற்கு மிகச் சிலரே பொருள் விரிக்க முற்படலாம். தமிழ் வைத்திய முறைகளைக் கூறும் செய்யுள் வடிவு கொண்ட நூல்கள் பலவற்றிலும் தேரையர் இயற்றியுள்ள வைத்திய பாகத்தைக் குறிக்கும் செய்யுள்கள் எப்படிச் சிறந்து பாவலர்க் கின்பம் பயக்கின்றதோ அவ்வாறே வியாஸபாரத சுலோகங்களும் எனக் கூறுவது மிகையன்று. எனவே இம்மாபெருங் காவிய இன்பம் நந்தமிழ் நாட்டினர்க்கு எட்டாக் கிளையில் கட்டா நின்ற தேன்கூடாகவே யிருந்து வந்தது. இக்குறையைச் சமீப காலத்தில் நீக்கும் புனித முயற்சியில் கண்ணபிரான் திருவருட் பிரசாத பலத்தினால் ஈடுபட்டு வியாஸபாரத சுலோகங்களின் பொருளைத் தமிழ்மொழியில் வடித்து உதவிய கும்பகோணம் காலேஜ் ஸம்ஸ்கிருத பண்டித மஹாவித்வான் சதாவதானம் ஸ்ரீ. உ. வே. தி. ஈ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கட்கு இத் தமிழுலகம் என்றென்றும் கைம்மாறிழைக்கக் கடமைப்பட்டுளது. ஒப்புயர்வற்ற எப்பெரு முயற்சியாளர்களையும் ஆதரித்து ஊக்கமளிக்கும் நல்லியற்கை நந்தமிழ் மக்களிடம் ஓங்கி நிற்கவில்லை யென்பதை நாம் வருத்தத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியதே. நாடு செழித்து உரிமை யெய்தினாலன்றி இக்குறை நீங்காதென்றே சொல்லலாம். தலை நிமிர்ந்த இதர தேசங்களை யெல்லாம் விசாரிப்போமாயின் கலை வளர்ச்சியும், மொழி பெயர்ப்பு நூல்களின் பெருக்கமும், பெண்களின் விழிப்புமே தலைசிறந்த காரணங்களாகத் திகழ்வது விளங்கும். இவ்விடயத்தினைப்பற்றி எழுதப்புகின் அஃதோர் கட்டுரையாக விரியும். இனி எடுத்துக்கொண்ட விடயத்தைப்பற்றிச் சிந்திப்போம். மேலே கூறிய பெரியாரின் அரிதினும் அரிய விடா முயற்சியைப் பாராட்டிப் புத்தக வடிவில் அச்சிட்டு உபகரிக்க முன்வந்தவர்களை அடுத்தாற்போல் வணங்கிப் போற்றுதல் அறிஞர் கடனாகும்.

இவ்வாறு வெளிவந்த பர்வங்களில் சிலவற்றைக் கண்ணுற நேர்ந்தபோது தமியேன் அடைந்த வியப்பினையும் ஆறுதலையும் இங்கு எழுத்தில் விவ

---

எப்பொழுது நாம் "அதிர்ஷ்டத்"தை அதிகமாக விரும்புகின்றோமோ, அப்பொழுது அவள் நம்மை அதிகமாக அதட்டிப் பார்க்கின்றாள்.

ரிக்கும் ஆற்றல் எனக்கில்லை யென்றே கூறுவேன். என்னையெனின் சுமார் 35 ஆண்டுகட்கு முன், முதல் முதலாக வில்லிபாரதம் படிக்க நேர்ந்தது. அஞ்ஞான்று பழம் பொருந்து சருக்கத்தில் காணப்படும் பாஞ்சாலி கூற்றாக வரையப்பட்டுள்ள,

"ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிகளாகவும் இன்னம்வே றொருவன்
எம்பெருங் கொழுநன் ஆவதற்குருகும் இறைவனே எனதுபேரிதயம்
அம்புவி தனிற்பெண் பிறந்தவரெவர்க்கும் ஆடவர் இலாமையினல்லால்
நம்புதற்குளதோ என்றனள்வசிட்டன் நல்லறமனைவியே யனையாள்

என்ற செய்யுள் என்னைத் திடுக்கிடச் செய்தது. செய்புளில் அமைந்திருந்த சொல்லின்பமும் எனக்கு வெறுப்பாயிற்று.

பெண் தன்மையை உண்மைக்கும் இயற்கைக்கும் மாறாக நடுங்காது கூறப்பட்டிருக்கும் பாக்களை நீதிநெறி விளக்கம் காசிகாண்டம் முதலிய நூல்களின் இடையே கண்டு அருவருப்புற்றதுண்டு. ஆயினும் அவைகளை யியற்றியவர்களின் அறியாமையோ? அல்லது அவரவர் சொந்த அநுபவமோ இவ்வாறு வரையச் செய்ததெனப் புறக்கணிக்க இடமளித்தது. அவ்வாறின்றி ஐந்தாம் வேதமென்று போற்றப்பட்டதும் வேத வியாஸ பகவானால் வரையப்பட்டதும் ஒப்புயர்வற்ற பகவத்கீதையையே தன்னுட் கொண்டதுமாகிய பெரிய இதிஹாஸமாகிய மகா பாரதத்தில் பிரதான அரசியும் அனலிற் பிறந்தவளுமாகிய பாஞ்சால குமாரியே இவ்வாறு உறுதி கூறியதாக வரைந்துள்ள தென்பது எவ்வறிவையும் கலக்கத் தக்கதன்றோ? அதன்மேலும் அப்படிக்கூறிய பெண் வசிட்டரின் தரும பத்தினியாகிய கற்புக் கடவுளுக்கு ஒப்பானவள் என்றும் சாஸனப்படுத்தியுளது. இத்தகைய அடாப்பழியைத் தமிழ்ப் புலவர்கள் கண்டிக்க முன்வராத காரணம் யாதோ? உண்மையில் பெண்புலமையாளர் குன்றியதினாலேயே இது மறுக்கப்படாமல் இருந்ததென்று எண்ணாமலிருக்க முடியவில்லை. பெண்ணின் இயற்கைப் பெருமையை நம் தமிழ்ப் புலவர்கள் பாதுகாக்க விரைந்தார் இல்லை என்பதற்கு இதைவிடச் சான்று வேறும் வேண்டுமோ?

இவ்வித நீதியற்றதும் சமூகத்திற்கே அவமானம் இழைப்பதுமாகிய அபிப்பிராயங்கள் முதல் நூலாகிய வடமொழி வியாஸ பாரதத்திலும் உண்டோ? என்னும் ஐயமும் எழுந்தது. அதனையறியும் பொருட்டு அம்மொழிப் பண்டிதர்களை நாடித் தேடி வினவியபோது பழம் பொருந்து சருக்கம் என்பதே வியாஸபாரதத்தில் கிடையாதென்று கூறினார்கள். அவ்விடை கிடைக்குமளவும் கண்ட கண்ட தமிழ்ப் புலவர்களிடமெல்லாம் இதைப்பற்றிக் கலந்து கேட்பதுதான் முதல் வேலையாகவிருந்தது. ஆனால் அனைவரும் ஷை செய்யுளுக்குப் பொருள் வேறுவிதமாகச் செய்யலாமோ? என அமையாத யுக்திகளெல்லாம் புகுத்திப் பார்க்க முந்தினர். அந்தோ! ஆறுதல்தரும் வழி காண முடியவில்லை. இந்த இல்லாத சருக்கமும் பொல்லாத அநீதியும் வில்லி பாரதத்தில் எப்படி இடம் பெற்றதென்பது இன்னமும் தெளியக்கூடவில்லை. முதல் நூலில் இப்பழிமொழி இல்லையென்பதை யுணர்ந்த நாள்தொட்டு வியாஸ பாரதத் தமிழ் மொழிபெயர்ப்பு எவரால் வெளிவரப்போகின்றதென்று தவங்

---

ஒவ்வொருவனும் உயிரை உயர்ந்ததாகவே கருதுகிறான். ஆனால் வீரர் உயிரினும் மானத்தையே உயர்ந்ததாகக் கருதுவர்.

கிடந்த எளியேனுள்ளம், இப்போது கிடைத்த மேலே சுட்டிய மஹா வித்வான் சதாவதானம் ஸ்ரீ. உபய. வே. தி. ஈ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள் மொழிபெயர்ப்பு நூலைக்கண்டு ஆறுதல் பெற்றதில் அதிசயம் உண்டோ? இத்தகைய பெருந்தவறு வில்லிபாரதத்தில் எவ்வாறு நுழைந்ததென்பதே எனது வியப்பிற்குக் காரணம். தமிழில் பெருந்தேவனார் நல்லாப்பிள்ளை என்பார் பாரதத்தினை இயற்றியுள்ளார்கள். எனினும் இதனை மறுத்ததாகக் காணப் படவில்லை.

சென்னையில் ஹாமில்டன் ஞாபகார்த்த வாராவதி ஆங்கிலம் அறியாத் தமிழர் வாயில் அம்பட்டன் வாராவதியாக வழங்கி, தமிழ் ஆங்கிலம் இரண்டும் உணர்ந்த நம் இளவல்களால் பார்பர்ஸ் பிரிட்ஜ் எனக் கூசாமல் உருவங்கொண்டு தவழ்வதற்கே இதை ஒப்பிடலாமன்றி வேறென்சொல்வது. இதுமட்டில் அன்று; வடமொழி வியாஸ பாரதத்திற்கும் தமிழ்ப் பாரதங்களாகிய வழி நூல்களுக்கும் பலப்பல கதை வேற்றுமைகளும் காண்பதற் கெளிதாகவுள. வேற்றுமைகளில் ஒன்றாவது நமது சமூகத்திற்குப் பெருமை தருவதாகவும் இல்லை. அவைகளைத் தனித்தனி ஆராய்ந்து உண்மை காண்பது கற்றோர்தலைக் கடனாகும். ஈண்டு முதலாவதாகக் குறிப்பிட விழைவது பொதுவாகப் பெண்ணின் இயல்பான பெருமைக்குக் கேடு சூழ்ந்தமையைப் பற்றியதே யாகும். மகா பாரத பாத்திரங்களில் பிரதான பட்ட மகிஷியாகிய ஒப்பில்லாத பதி பக்தி உடைய காந்தாரி என்னும் திருதராஷ்டிர பத்தினியை மகா துன்மார்க்க குணமுள்ளவளும், சுயநலமும், வஞ்சகமும் நிரம்பியவளும் பாவகாரியான தன் மகன் துரியோதனனை ஆதரிப்பவளுமாக வழிநூல்களில் வருணித்திருப்பது மிகமிகக் கேவலம் என எண்ணும்படி வியாஸ பாரத வரலாறு சித்தரிக்கப்பட்டுளது.

காந்தாரி என்னும் கற்பரசி தனது கணவனை அமைந்தவர் கண்கள் இல்லாதவர் என அறிந்த வுடனேயே தனது கண்களையும் வஸ்திரத்தால் பொதிந்து கொண்டதாகக் கூறப்படுகிறது. அத்தகைய வைராக்கியம்கொண்டு உலகக் காட்சிகளையே காண வெறுத்தவர் காந்தாரியம்மையார். அவர் துரியோதனன் பிறந்தபோது உண்டான உற்பாதங்களைக் கூர்ந்து கவனித்து அந்தச் சிசுவினால் அரசுக்கும் தேசத்திற்கும் விபத்துக்கள் விளையுமென அஞ்சி அத்தகைய தலைமகவின் மீது அன்பை மறந்து தரும சாஸ்திரவிதிப்படி அம் மகவினை இராஜ மாளிகையில் வைத்து வளர்க்கக்கூடாதெனக் கணவனிடம் கூறியதாகத் தெரிகிறது. பின்னர் துரியோதனனால் குடும்பத்தில் கலகம் நிகழ்ந்த சமயங்களி லெல்லாம் புதல்வனை அரசுரிமையினின்றும் நீக்கி உத்தம குணமுடையவரான பாண்டு மகாராஜனின் புத்திரராகிய தருமநந்தனருக்கு முடிபுனைந்து தருமந் தவறாது செங்கோல் செலுத்தும்படிப் பெரிய அரசனிடம் ஆலோசனை கூறியிருக்கிறதாய்க் காணப்படுகிறது.

யுத்தம் நடந்து கொண்டிருக்கையில்கூட பல தருணங்களில் அரசனிடம் அணுகி, ஆதிமுதலாகவே தன் ஆலோசனையை யேற்காமல் புத்திரவாஞ்சையினால் அவன் செய்கைகளை யெல்லாம் அவ்வப்போதும் ஆதரித்துவந்து,

---

பிரபுவர்க்கம் எது?—உண்டாக்காமல் உண்பவர், உழையாது வாழ்பவர், வகிக்கத் திறமையின்றி உத்தியோகங்களை வகிப்பவர், தகுதியின்றி கௌரவங்களை அபகரித்துக் கொள்பவர்—இவரே "பிரபுக்கள்."

போலிக் கண்ணீர் வடித்து, தம்பியின் மைந்தர்கட்கு இழைத்த துரோகத்தைச் சுட்டிக்காட்டி, எவராலும் தடுக்க முடியாத போர் மூண்ட பிறகு வருந்துவதில் பயன் உண்டோவென வாதாடியதாகவும் தெரிகிறது. காந்தாரியைப் போன்ற நியாயத்தில் நிலைத்த புத்தியுடைய மாதர்கள் இல்லையென்றே விளங்குகின்றது. தமிழ்மொழியில் உள்ள பாரதங்களைப் படித்தால் காந்தாரி போன்ற நிந்திக்கத்தக்க ஸ்திரீ இல்லையென்றே எண்ணலாம். அகங்காரமுள்ள பெண்களை காந்தாரி என்றழைக்கும் உலக வழக்கே இதற்குப்போதிய சான்றாகும். எவ்வாறாகவோ பெண்களைக் குறைவுபடுத்துவது ஆண்மகனுக்குப் பெருமை தரும் ஒரு கடமையாக எண்ணிய ஒரு சிலர்-இடைக் காலத்தில் பாமரர்களேயன்றிப் பண்டிதரிலும் இருந்ததாகத் தெரிகிறது. அவர்கள் அறியாமைக்கு என் செய்வது? கற்றவர்களிலும் பலர் உலகையறியும் பேரறிவு பெறாமல் எழுத்துக்களைச் சுமந்த புத்தகத் தாள்களைப்போல வாழ்நாள் கடத்துகின்றனர். இத்தகையார் செந்தமிழும் நாப் பழக்கம் என்ற மூதாட்டியார் வாக்கின்படி நாவின் பழக்கத்தினால் தாம் கற்ற நூல்களில் உள்ள கருத்துக்களைத் தாம் உட்கொண்ட வகைக்கு ஏற்பப் பாடலாகப் புனைந்துவிடுகின்றனர். பாடல் வடிவத்தைக் கண்டாலே பயந்து எப்படிப் படிப்பதெனத் தயங்கும் தற்கால இளைஞர்கள் பலருக்கும் உலகமறியாது கவி பாடும் அறிஞர் வாக்குக் கடவுள் வாக்காகப்படுகின்றது. ஆகவே தவறுகளுக்கும் மாறுதல் பாத்தியம் ஏற்பட்டு விடுகிறது. விரிந்த மனமுடைய சான்றோர்கள் இவற்றைப் புறக்கணியாது களைந்தொழிக்கவேண்டியது உலகிற் கிழைக்கும் அறத் தொண்டாகும்.

இதுவன்றி மகாபாரதத்தில் காணப்படும் காந்தாரி யம்மைக்கு அடுத்த அரசி யாகியவரும் பாண்டவரைப் பெற்றெடுத்த பாக்கியவதியுமாகிய குந்தி தேவியாரின் அரச நீதி, ஆலோசனைத் திறம், தாயின் கடமை முதலிய பண்புகளைத் தனித்தனி எடுத்துக் காட்டுதல் அவசியம். பாரதப் பூங்காவனம், பரத குல மாதர்களின் அறிவு, பணிவு, ஒழுக்கம், கற்பு, உறுதி, தியாகம், சாந்தி முதலிய பலவகை மலர்களினால் நறுமணம் வீசிப் பொலிகின்றதாகவே காய்தல் உவத்தல் இன்றிக் காண்போர்க்கு விளங்கும்.

திரௌபதா தேவி அரச மன்றத்தில் மாயச்சூதாடி யாவும் இழந்ததாகக் கேட்டபோதும், தருமநந்தனர் தம்மை முதலில் தோற்றுப் பிறகு என்னைத் தோற்றாரா? என்னைப் பணயம் வைத்தாடிய பிறகு தன்னைத் தோற்றனரா? எனக் கேட்ட நீதி நுட்பத்திற்கு விடைபகர முடியாமல் அரசர் கூட்டங்களெல்லாம் ஊமர் கணம்போல் விழித்ததென நமது வில்லிபுத்தூராழ்வாரும் அறிவுடைய விகர்ணன் வாயிலாக வழங்குகின்றனர். பின்னும் அப்பாஞ்சாலி இறுதியில் தருமனை நோக்கிச் சூதாட்டத்தினால் ஏற்படுத்திக்கொண்ட அடிமைத்தனத்தை சூதாட்டத்தினால் நீக்கிக்கொண்ட பிறகே வனம் புகுதல் வேண்டுமென அறிவுறுத்தியதும், பணயப் பொருள் இல்லையெனக் கவன்ற வேந்தருக்குத் தமது தருமத்தை நினைவூட்டியதும் சிறிய சான்றுகளா? ஒவ்வொன்றினையும் விரித்தெழுத விரும்புவதாலும் கட்டுரை நீண்டுவிட்டதாலும் இம்முறை இவ்வளவோடு நிறுத்தலாயிற்று.

---

"வக்கீல்" யார்?—உன் சொத்தை எதிரியினிடமிருந்து பிடுங்கித் தனக்கு வைத்துக்கொள்ளும் கனவான்.

# திருவாசக மென்னுந் தேன்.

(கந்த நரசிம்மன், பி.ஏ., பி.எல்.)

நமது தெய்வத்தமிழ்நாடு பண்டைக்காலத்தில் சிறப்பாக மூன்று பொருள்களால் பிரசித்தி பெற்றிருந்தது. அவையாவன: முத்து, சந்தனக்கட்டை, மயில்கள். இவைகளுடன், அதாவது ஒருவித மணி, ஒருவித மரம், ஒருவித ஜந்து அல்லது பறவையுடன், இன்னும் இருவிதமான உருவமற்ற பொருள்களாலும் சிறப்புற்றிருந்தது. அவை குளிர்ந்த தென்றலும், அமுதை ஒத்த தமிழ்மொழியும் ஆம். தற்போது இங்கு வேறெப்பொருள் குறைபட்டிருப்பினும், நல்ல வேளையாகத் தமிழ் மறையாம லிருக்கிறது. முற்கூறிய உருவப் பொருள், அருவப்பொருள், எண்ணப்பொருள் என்ற மூன்றினுள், மூன்றாம் விதமான எண்ணப் பொருள்களில் அதாவது கலை, காவியம், இலக்கியம் போன்ற பொருள்களில் தமிழ்நாடு தவப்பயனாக அருமையாகப்பெற்ற ஒரு பொருள் ஒன்றுண்டு. அது ஆரிய எண்ணங்களால் ஆக்கப்பட்டது. தமிழ் மகன் எத்துணைக்காலம் உயரிய எண்ணங்கள்கொண்டு திகழ்கிறானோ அத்துணைக்காலம் அது அறியாமலிருப்பது. அது தமிழ்நாட்டில் தோன்றியதால் 'அமுதுறத்தமிழி'ல் வார்க்கப்பட்டது. அது தனித் தமிழ்ப்பொருள். எனினும், அது தென்னாட்டி லுண்டானாலும் எந்நாட்டவர்க்கும் பொதுவாயிலங்குவதுடன் ருசிப்பவர்க்கினிப்பது. ருசி-அதாவது இனிப்பு, கசப்பு என்றெல்லாம் தெரிவது நம்மன நெகிழ்ச்சியாலாம். மனதிற்கு இன்பந் தருவதை இனிப்பென்பது வழக்கு. ஆகவே, நான் முற்கூறிய பொருளும் மனதிற்கு மிக மிக இன்பந்தருவ தொன்றாகையாலும், மணமும், தெளிவும் கொண்டு இயற்கையாக உண்டாகும் தேன் போன்றதாலும், அதற்குத்தேன் என்ற சிறப்புப்பெயரும் உண்டு. அதுதான் 'திருவாசகமென்னுந் தேன்.'

நாம் நம் கண்ணால் தேனைப்பார்க்கலாம். ஆனால், அதன் ருசியை அறிய வேண்டுமானால், நாக்கும், அதனால் ருசி யறியும் உணர்வு மிருந்தால்தான் தேனின் சுவையை அறியலாம். தாகமுள்ளவர்களுக்குத் தேன் மிகுந்து இனிக்கும். நோயுள்ளவர்கள் உட்கொண்டால் தேன் நோயை நீக்கும். நாள்தோறும் ஏற்ற அளவில் அதைச் சிறிது பருகினால் நம் உடலானது நலம் பெறும். அதுபோல மேற்சொன்ன 'திருவாசக மென்னுந்தேனை முத்து முத்தாயுள்ள தமிழில் பார்க்கலாம். ஆனால் தமிழறிவு ஆகிய நாக்கும் தமிழ்ப் பயிற்சியாகிய சக்தியுமிருந்தால்தான் அதன் இனிமையை நன்கனுபவிக்கலாம். உடலில் தாகம்போன்று, உள்ளத்தில் பக்தி அல்லது ஆண்டவனிடத்து அன்பிருந்தால் அது மிக்க மகிழ்ச்சிதரும். மேலும், பிறப்பு இறப்பு என்ற பிணியை உடைய நமக்கு அது அருமருந்தாகி அல்லற் பிறவியை அழித்து, ஆனந்த

---

பேருண்மைகள் அழகுடன் பிணைக்கப்படாவிடில் அநீதி செய்யப்பட்டனவாகும். அழகுடன் பிணைக்கப்பட்டு முறைப்படுத்தப்பட்டுவிட்டால் அவை நிச்சயமாய் ஆன்மாவிற்குள் ஆழப்பதிய வழி தேடிவிடும்.

மாகிய ஆரோக்கியந் தருவதாகும். நாடோறும், உள்ள உணர்ச்சியுடன் 'திருவாசகத்தேனைச், சிறிதேனும் அநுபவித் துணர்ந்தால் நம் ஸ்தூல உடல் நலமும், வளமும், ஊமும் பெறும்.

இத் 'திருவாசகத்தேன்' எந்நாட்டினர்க்கும், எந்நிலையி லிருப்பவர்க்கும், எவ்வயதுற்றவர்க்கும் உவப்பிலாத ஆனந்தம் தருவது. இதைத் தமிழ்மக்கள் முற்காலம் சாலப்பருகினார்கள், ஆர அனுபவித்தார்கள், ரொம்ப நுனித்தார்கள். அப்போது, அவர்கள் இயற்கை வாழ்வில் ஈடுபட்டு, நெறிசார்ந்த நிலையில் விளங்கி, திருவாசகத்தேனை அநுபவித்ததால், அவர்களின் உடல்கள் கட்டழகில் திகழ்ந்தன, உள்ளங்கள் உணர்ச்சிமிக்க உவகையில் மூழ்கின, உயிர்கள் இறுதியில் ஆனந்தத்தில் அழுந்தின. ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பாலிருந்துவந்த ஆங்கிலேயர் (ரெவரண்டு போப் போன்றவர்) சிலர்கூட அதை அறிந்தானந்த முற்றனர். ஆனால், இக்கோதில் செந்தேனை—அதாவது குற்றமற்ற செந்தமிழ்க் கோமளவாசகத்தைப் பிற்காலத்தில் மறந்து, புறக்கணித்து, ருசியற்ற பிறநாட்டுப் பொருள்களின் கவர்ச்சியி லீடுபட்டுத் தமிழ்மக்கள் பலர் மதி கெட்டதால், அவர்கள் வாழ்க்கைநிலை தவறியது, நெறிமறைந்தது, அவர்களைத் துன்பஞ் சூழ்ந்துவிட்டது, அஞ்ஞான இருள் கம்மியது.

> 'தெள்ளுற்ற தமிழின் சுவைகண்டார்
> இங்கு அமரர் சிறப்புக் கண்டார்'

என்று சுப்பிரமணிய பாரதியார் பாடி யிருப்பதுபோலத் தமிழின் சுவைக்கு உலகில் ஈடில்லாதிருந்தும், தாமரை மலரின் கீழே உள்ள தன் நீரிலிருக்கும் தவளைகளைப்போல தமிழர் பலர் திருவாதவூரரின் திருவாய்க் கமலத்தி லுண்டான திருவாசகத் தீந்தேனைப் பருகாமலிருப்பது மிகவும் பரிதாபம். என்ன சாபமோ, அல்லது பாவமோ, தமிழ்மக்கள் பலர் இப்பொருளை அறியாது 'ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்' வாழ்ந்திருந்து வருகிறார்கள். அவர்கள் நிலையை நினைக்கவே வருத்தத்தால் நெஞ்சு நெகிழ்கிறது. பாரதியார் பாடிய

> 'நெஞ்சுபொறுக்கு தில்லையே இந்த
> நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்''

என்ற பாட்டு ஞாபகத்திற்கு வருகிறது. கேட்கவும், படிக்கவும், சிந்திக்கவும் ஏற்ற இத்தெய்வ நூலிருக்க, தமிழ்மக்கள்-அதிலும் சைவர்களில் பலர்-திருவாசகத்தை அனுபவிக்காது 'பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும் இகழ்ச்சி சொலப் பான்மைகெட்டு, நாமமது தமிழரென வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!' இனியேனும் அற்ப ஆயுளை வெறும் அலைச்சலில் வீணாக்கி விடாமல் தெய்வத் திருவாசகத்தைப் பாடியாடி உள்ளுருகிப் பெருகி, நெக்காடி யாடி, அருள் கலந்து ஆனந்த மதுவே ஆவதுதான் சிறப்பாகும். நிற்க,

இத்திருவாசகமாகிய 'தீந்தேனை' நமக்கருளி ஈந்தது யார் என்றால் ஞானக்கதிர் வீசும், மாணிக்கமாகிய மணிவாசகப் பெருமான். அவர் புனித

---

அறத்தாறு நில், அஞ்சற்க, உன் லட்சியமெல்லாம் உன் தேசத்தை—உன் கடவுளை—உண்மையைப் பற்றியதாகவே இருக்கட்டும். அங்ஙனமாயின் நீ வீழ்ந்தாலும் நீ பாக்கியம் பெற்றுத் தியாகியாகவே வீழ்வாய்.

வாய்ப் புஷ்பத்தினின்று பொழிந்த செஞ்சொல்தேனை யார் சேகரித்தது? அதன் முருகை அல்லது தெய்வமணத்தை அறிந்து, அச்சிவானந்தத் தேனைக்கொண்டு உலகுய்ய வேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு, நித்த மணாளனும் நிரம்ப வழகியனுமான சிவபெருமானே தன் உருயாறிப் பரிந்து வந்து, மணிவாசகப் பெருமானின் குமுதவாய்க்கோமள மலரினின்று சொட்டச் சொட்ட அதனைத் திருவேடுகளில் சேகரித்துத் திருச்சிற்றப்பலப் படிகளில் வைத்துவிட்டு மறைந்தார். இதனால் அச்சீரிய வாசகத்தின் பெருமையை எவ்வா றுரைப்பது !

திருவாதவூர்ப் பெருமான் அந்த ஞானத்தேனை எங்குக் கண்டார் என்றால், அழகிலும், மணத்திலும் இணையற்ற தெய்வ மலர்களாகிய சிவபெருமானின் செங்கமலப் பொற்பாதங்களில்கண்டு உண்டார். தம் கண்ணினை அத்திருப்பாதப் போதுக்காக்கி, வந்தனையை அம்மலர்க்கே யாக்கினார், சிந்தனையைச் செந்தாமரைக்காடனைய சிவத் திருமேனிக் காக்கினார். அப்படி யாக்கியதும், அவர் ஊனுருக, அவர் உள்ளொளிபெருக அவரிதய மலர் மலர்ந்து சிவானந்தத்தேன் பிலிற்றியது. அப்போது, அவருடைய திருவுடலில் அமுத தாரைகள் எலும்புத்துளைகள் தோறும் ஏறின, ஊனையும், உயிரையும் கலந்தன. சிவபெருமானின் அருளும் கருணை வான் தேனும் கலக்கப் பராவமுதாய் விட்டார் மணிவாசகனார்.

இனி, தனக்கென வேண்டாத பிறர்க்குரியாளனாக அவரிலங்கவும், ஞாலம் விளங்கவந்த நாயகனாகத் திகழவும், அவரினின்று திருவாசகம் எழுந்தது. அவர்காலத்துலகும், நாமும் நமக்குப் பின் வருவோரும் குருமொழிக்கிணையான பெருமொழிகள் மிக்க அத்திருவாசகத்தால் உய்யவேண்டுமென்று, கருணைகூர்ந்து 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய' சிவபெருமான் இன்பப் பெருக்காகிய இம்மணிவாசகத்தைச் சேகரித்துத் தமிழர்க்குத் தந்தார். அப்படித்தந்த தேனை நாம் நம் 'சிந்தை மகிழவும், முந்தைவினை முழுதும் ஓயவும்' பாடிப்பருகி மகிழ்ந்து, எண்ணுதற் கெட்டாத எழில் மிக்க கழலைக்கண்டு, கண்ணுதலான் கருணைக்குப் பாத்திரராக வேண்டும்.

'திருவாசகமன்றி ஒரு வாசகமில்லை' என்றும், 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்றும் சிறப்பித்துக்கூறிய திருவாசகத்தைத் தேனுக் கொப்பிட்டுத் 'திருவாசகமென்னுந் தேன்' என்று பாடி மகிழ்ந்தார் ஒரு பெரியார். அதாவது.

"தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவாசக மென்னுந்தேன்"

திருவாசகத்தைச் செந்தேனுக் கொப்பிடுவதே சாலப்பொருந்து மெனத் தெரிகிறது. எப்படியெனில், சூரிய வெளிச்சத்தால் மலர்ந்த மலர்களே

---

தீயவர் தம் குற்றங்களுக்குச் சமாதானம் கூறுவர். நல்லவர் தம் குற்றங்களை விட்டுவிடுவர். முதற் குற்றத்தைச் சரியென்று சாதிப்பவன் மூன்றாவது குற்றம் செய்பவனாவான்.

தேன் சொட்டும், அதைப்போல் இறைவனருட் கதிர்களால் ஞானமலர்ச்சி பெற்ற உள்ளமாகிய கமலம் பிலிற்றியதே திருவாசகத்தேன். சிவந்த செந்தேனே அழகாயிருப்பதுபோல், இம்மணிவாசகமும் செந்தமிழில் அமைந்திருக்கிறது. மணம் மிக்க செந்தேனைப்போல் திருவாசகத்திலும் சிவமணம் நிறைந்து வீசுகிறது. ருசிப்பதற்குத் தேன் இனிப்பதுபோல் படிப்பதற்குத் திருவாசகம் மிக இன்பமா யிருக்கிறது. பருகினல் தேன் உடலுக்கு வளம் தருவதைப்போல், நாடோறும் கருத்தூன்றிப் படித்தால் திருவாசகம் நம் எண்ண உடலைத் தூய்மையாக்கும். அதனுல் நம் சித்தங் களிகூரும், தெளிவாகும், சிவமாகும், நாம் செய்யும் கருமம் தவமாகும்! நோயுள்ளவர்களுக்குத் தேன் ஒரு மருந்தாவதுபோல், திருவாசகமும் மேலே பாட்டில் கூறியது போல, துன்பந்தரும்படியான பிறவி நோயை நீக்கும் பேரௌஷதமாகிய ஞான மருந்தாகும்.

கருணைகடலாகிய சிவானந்த சாகரத்தினின் றெழுந்த மணிவாசகப் பெருமாளுகிய கொண்டல் அருளால் பொழிந்த இன்பஞான மழையே திருவாசகமென்பது. 'சந்தனமெல்வாசம் கமழும் குளிர்ந்த தென்றல்' போன்ற இலக்கிய இன்பம் மிக்க செந்தமிழ்ச் சோலையில், சிவக்கதிராகிய சூரிய ஒளியில் திகழுவதே திருவாசகமாகிய ஞானமலர். அஞ்ஞானமாகிய இருளில் வினைகளாகிய பள்ளங்களில் தவறி விழுந்து இடர்ப்படும் உயிர்கள் நன்னெறியாம் நல்வழியடைந்து மேற்சென்று சிவபுரமாம் இன்பவுலகை அடையவேண்டுமெனத் திருவாதவூரரெனும் ஞானச்சூரியன் மெய்ஞ்ஞானமாகிய மின்னிர்சுடராகி ஒளிபரப்ப, அஞ்ஞானமாகிய இருளகலத்தோன்றிய பொற்கதிரே திருவாசகம். பேரின்ப உலகமாகிய சிவபுரத்தினின்று தென்னுட்டில் இறங்கித் தமிழாகிய சோலையில் சஞ்சரித்துப் பாடி மகிழ்ந்த மாணிக்கவாசகர் என்ற பூங்குயிலின் பேரின்பப்பாட்டே திருவாசகம். உயிர்களைத் துன்புறுத்தும் வினைகளாகிய மாயைச் சிற்றினங்கள் மறைந்தோடி அழியுமாறு மாணிக்கவாசகரெனும் ஞானச்சிங்கம் முழக்கிய கர்ஜனையே திருவாசகம். பலவகையான இலக்கிய நூல்களாகிய நவரத்தினங்களால் சித்திரிக்கப்பட்ட தமிழ் என்னும் உயர் மொழிப் பதக்கத்தில், உள்ளங்கவரும் ஞானக்கதிர் வீசும் ஒப்பில்லாத மாணிக்க வயிரமே திருவாசகம். காணவே கண்ணில் அமுதூறித் தித்திப்பதென்ன இன்பமூட்டும் உயர்ந்த ஓவியங்களுள்ள சித்திரகூடமாகிய தமிழில், 'ஓவியத்தெழுத வொண்ணுத உருவத்தாளுகிய சிவபெருமானை' மாணிக்கவாசகரென்னும் சித்திரக்காரன் படம் பிடித்து வரைந்த அரிய பெரிய ஓவியமே திருவாசகம்.' ஆனந்த மெழுப்பம் நன்னூல்களென்னும் சிலைகள் விளங்கும் தமிழென்னும் சிற்பமண்டபத்தில், மாணிக்கவாசகரென்ற தெய்வச் சிற்பி செதுக்கிநாட்டிய சிவச்சிலையே திருவாசகம்.

இப்பேர்ப்பட்ட பெருமை வாய்ந்த திருவாசகமாம் ஞானமணிப் பெட்டகத்திலுள்ள அருமையான பொருளை அநுபவியாது அவமாகக் காலத்தைக் கழிக்கிறுர்கள் பலப்பல தமிழர்கள். இரண்டணுவில் பதிப்பித்துங்கூட ஆயிரக்கணக்கான திருவாசகப் பிரதிகள் வாங்குவாரின்றி மீதங்கிடந்து விட்டன வென்றுல் என்னென்று வருந்துவது. இனியேனும், தமிழர்கள் இல்லங்கள் தோறும் திருவாசகமென்னும் திருவிளக்கை ஏற்றவேண்டும். அங்குச்

---

மனத்தைத் தேற்றிக்கொள். கண்களைத் துடைத்துக் கொள். சில சமயம் நாம் விழுவது அதிகச் சந்தோஷத்தோடு எழுவதற்கே.

சிவமணம் வீசும் அதன் பரிமளம் நிறையவேண்டும். திருவாசகநாதம் நம்மில்லங்களில் தொனிக்கவேண்டும். திருவாசகம் என்னும் அமுது நம் ஊனிலும், எலும்பிலும், உள்ளத்திலும், உயிரிலும் கலக்கவேண்டும். உணர்வெல்லாம், பாடும் வாயெல்லாம் அதனாலே தித்திக்கவேண்டும். நாம் அதை அநுபவித்தாலே மேல் நாட்டார் முதலிய பிறநாட்டார் அதை. நாடுவார்கள். அழியும் வெறும் பொருள்களைக் கொள்ளையிட்டுச் செல்வதைவிட்டு, அவர்கள் தமக்கும் பிறர்க்கும் நன்மை விளைவிக்கும் திருவாசகம் போன்ற ஞானப் பொருள்களை அநுபவிப்பார்கள். திருவாசகத்தை மொழி பெயர்த்த ரெவரண்டு போப் போன்ற உலக சஞ்சாரியன்றோ ஒப்பற்ற உலக சஞ்சாரி. அவரைப்போல் மேனாட்டார் பலரும் திருவாசக ருசியை அனுபவிக்க விரும்புவார்கள். ஆனால், அதன் ருசியை முன்னே நாம் அநுபவித்தால், பிறர்க்கும் அது விளங்கும். மேனாட்டார் அதன் பெருமையைக் கண்டுவிட்டால் போதும். பிறகு அதில் ஆராய்ச்சி என்னும் உணர்வு செலுத்தி விதவிதமான புது நூல்களைனும் புதுப்பொருள்களுண்டாக்கி உலகுக் குதவுவார்கள்— மேலும், தமிழர்கள் 'சேமமுற வேண்டுமெனில் தமிழோசை உலகமெலாம் செழிக்கச் செய்யவேண்டும்.' ஆகவே, தமிழர்கள்—அவர்களிலும் சைவர்கள் சிவபக்தியெனும் சுடர் கொழுந்துவிட் டெரியத் தமிழ்ப் பற்றெனும் நெய் யூற்றி உலக இன்பமென்னும் ஓமம் வளர்ப்பார்களாக.

திருவாசகத்தைப் பற்றித் திருவருட் பிரகாச வள்ளலார் ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகள் பாடிய பாடல்களை நாம் ஆராய்ந்தறிந்தால் திருவாசகத்தின் மகிமை விளங்கும். அவை யாவன:—

சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே! நீ உரைத்த வாசகத்தை எண்ணுதொறும்
காமமிகு காதலன்தன் கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாள் இன்பினும் இன்பெய்துவதே. (1)

வான்கலந்த மாணிக்கவாசக! நின்வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால், நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித் தீஞ்சுவைகலந்து என்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே. (2)

வருமொழிசெய் மாணிக்கவாசக, நின் வாசகத்தில்
ஒரு மொழியே என்னையும் என்னுடையனையு மொன்றுவித்துத்
தருமொழியா மென்னில் இனிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே. (3)

வாட்டமிலா மாணிக்கவாசக! நின்வாசகத்தைக்
கேட்டபொழுது அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே. (4)

---

நன்றாய் எழுதப்பட்ட ஜீவிய சரிதம் நன்றாய் வாழப்பட்ட ஜீவியத்தைப் போலவே அரியதாகும்.

# வேழமும் குழவியும்.

(திரு. க. சு. கோபாலகிருஷ்ணன், மாணவர், சத்தியமங்கலம்.)

மலைவழி மருங்கில் மாம்பல வளர்ந்து
தலைமேற் கவிகை தழுவிப் பிடித்திட
அழகிய குழவியொன் றுண்டுத் தரையின்
நிழலிற் கிடந்து நித்திரை செய்திடும் 4.

கனிகள் பொறுக்கும் காரியத் தினளாய்த்
தனியே இருந்த தாய்மிகப் பயந்து
கதறினள்! ஏனெனிற் களிறொன் றவ்வழி
மெதுவாய் நடந்து மேவிடல் கண்டாள்! 8.

சருகுகள் மிதிபடுஞ் சத்தத் தாலெழுந்(து)
அருகுறங் கியமக வதன்முகம் மறைத்த
சுருண்டமென் மயிரினைத் தூரத் தள்ளிச்
சிரித்திடும் நோக்கியே சிந்தூர முகத்தினை. 12.

அன்னைதான் அவ்விடம் அடைத லொணாத(து)
உன்னியே பயத்தால் உட்கொளாள் மூச்சும்
பயமும் துக்கமும் பற்றிட நோக்கினள்
கயமது குழவியைக் காலால் கொலச்செலல். 16.

பருத்ததன் கால்களைப் பாலனின் உடல்மேல்,
இருத்த எண்ணியே இருந்தது யானை.
களிறது தன்மேல் காலிடல் கண்டும்
களியொடு நகைத்துக் கைகுவித் ததுசேய். 20.

தூக்கிய காலினைத் தூரவே களிறிடல்
நோக்கினள் தாயும்—நுவலரும் இன்பொடு
மற்றைக் கால்களும் மதலைக் கப்புறம்
உற்ற தறிந்து உவப்பொடு சென்று, 24.

மதலையை எடுத்து மார்புற வணைத்து
இதயத் தன்பொடு ஏத்தினள் அத்தியை,
அதுவும் சென்றது அடவியுள்ளாதலின்
இதுவாம் இன்முகம் எய்திடும் நலனே. 28.

(இஃது "Elephant and the Child" என்ற ஆங்கிலக் கவிதையின் மொழிபெயர்ப்பு.)

# ஆங்கில மொழிக் கலப்பு.

(இணுவில்-இ. சபாரத்தினன்.)

இப்பூமிசை வழங்கும் பாஷைகளோ அளவிறந்தன. அப்பாஷைகளைக் கற்றுத் தேரிய பாஷாபிமானிகளும் அநேகருளர். ஆயினும், ஏனைய பாஷைகளைக் கற்றுப் பாண்டித்தியம் பெறாத சிறியேன், இவ்விஷயத்தை எடுத்து, நம் பத்திரிகையின்கண் எழுதத்துணிந்தமை எனக்கே நகை விளைக்குமாயின் அறிவாளர்களுக்குப் பெரு நகை விளைக்குமன்றோ! எனினும், நம் பைந்தமிழாகிய செந்தமிழ் மாட்டு வைத்த அன்பின் மிகுதியால், இவ்விஷயத்தை எழுதத் துணிந்தேன். ஆகையால், பெரியோர்கள், சிறியேனது விஷயத்தையும் சிறிது நோக்குவார்களென வெண்ணுகிறேன்.

ஐயன்மீர்!—பத்திரிகையின் அருமை பெருமைகள் இத்துணையவென எடுத்துக் கூறற்பாலனவல்ல. அது ஓர் விஷயத்தைப் பரவச் செய்தலில் வாயு தேவனிலும் மிக்க வேகமுடையது. அவ்விஷயத்தை ஜனங்கள் மனதிற் பதியச் செய்தலில் போாசிரியனை யொத்தது. எங்கும் நின்று, எல்லாவற்றையும அறிவித்து, எவ்வெவற்றையுஞ் செய்து முடிக்கும் பேராற்றல் படைத்தது பத்திரிகை யன்றிப் பிறிதொன்றில்லை. ஆதலின் இவற்றை நடாத்தும் பத்திராதிபரே உலகத்தவர்களின் உயர்வு தாழ்வுக்கு முக்கிய காரணர். ஆதலால் பாஷைநலம் குன்றாது பாதுகாக்கும் பாஷாபிமானியுமவரே.

உலகத்திலே எத்தேசத்துச் சுயபாஷை தன்னலம் குன்றாது வளருகின்றதோ, எச்சாதியார் சிரத்தையோடு வளர்க்கின்றார்களோ அத்தேசமும், அச்சாதியாரும் மேனிலையெய்துவார் என்பது திண்ணம். ஒருவன் சுயபாஷைச் சொற்களினாலேயே பொருள்களை இலகுவில் விளங்குவான், தமிழறிவுமாத்திரமுடையாருக்கு ஆங்கில மொழிகள் வாளா தொனியை மாத்திரம் உண்டாக்குதலன்றி உண்மையில் கருத்தைப் புலப்படுத்தமாட்டா. ஆதலின் தமிழ்ப் பத்திரிகைகளில் தமிழ்ச் சொற்களையே கூடியவரையில் தேடியமைத்தல் நலமாகும். ஆங்கில பாஷா பதங்கள், நந்தமிழ்ப் பாஷையின் இனிமையைக் குறைக்கின்றனவே! இதனைப் பத்திராதிபர்கள் அறியார்கொல்?

“வைஸ்ராய், கவர்னர், கால்குலேஷன்” என்றின்னபிற ஆங்கிலமொழிகளைத் தமிழில் கலந்தெழுதும்போது வாசிப்பவர்கட்குச் சந்தோஷத்தைக் கொடுக்கின்றதா? அன்றேல், அவர்கள், பிற பாஷாபதங்கள் செறீஇய வசனங்களை வாசிப்பதனால் பாஷையைத் திருத்தி வாசிப்பார்களா? இல்லை. மேலும்

---

நமது சந்தேகங்களே நமது துரோகிகள். ஆள்வினை செய்ய அஞ்சுவதால் அநேக சமயங்களில் நாம் அடையக்கூடிய நன்மையை இழந்துவிடும்படி செய்கின்றன.

தமிழ்ப் பாஷையில், பாண்டித்தியம் மிக்க பத்திராதிபர்களுங்கூட, மேற்கூறிய ஆங்கில மொழிகட்கு "பிரதி காவலர், தேசாதிபதி, கணித்தல்" என்றின்ன தமிழ்ப் பதங்களைக் காணாது அலமந்து திரிந்தமை பெரும் விந்தையினும் விந்தையே!

பொருத்தமாய நம் பாஷைச் சொற்களைக் கம்ப ராமாயணத்திற்றேடுவாமா? உத்தரவேத புத்தகத்தில் நாடுவேமா? அன்றேல் உத்தமமாய அகராதியொன்று நடுவிலிருக்கிறதா? என்று யோசித்துக்கொண்டு இடர்ப்படும் பத்திராதிபர்களும் உளர். ஆங்கிலமொழிகளைக் கலப்பதேயில்லை தமிழ் மொழிகளைக் கொண்டே எங்கள் உள்ளக் கிடைக்கைகளை வெளிப்படுத்துவேம் என்பதோருறுதி அகத்துப் புகின் ஆங்கில மொழிக் கலப்பு நீங்கியே விடுமென்க.

இதனை அனுபவத்துக் கண்ட பாஷாபிமானிகள் இலங்கையிலும் இந்தியாவிலும் அநேகருளர். இலங்கதுவீபத்தில், கிரி தீபம்போற் றுலங்காநின்ற சர்வாகம பண்டிதராகிய காலஞ்சென்ற ஸ்ரீமான் பொ. இராமநாதன் அவர்கள் போன்ற பெருந்தகையாளர் இதற்குச் சான்றாவர். இவர்கள், ஆங்கிலபாஷா ஞானத்தில் மேம்பட்டவர்களாயினும், சம்பாஷிக்கும் பொழுதும், எழுதும் பொழுதும், ஆங்கிலமே முழுதும் உபயோகிப்பார்கள். அன்றேல், தமிழே முழுதும் உபயோகிப்பார்கள். அஃதொழித்து, ஆங்கிலத்தொடு தமிழும், தமிழோடாங்கிலமும் கலக்கும் வழக்கமவர்களிடத்தில்லை; அத்தகைய பெருந்தகையாளரோடு சம்பாஷணை செய்யப் பெற்றார் இதனை நன்குணர்ந்திருப்பர். ஆகையால், பத்திராதிபர்களும், பாஷாபிமானிகளும் இவ்விஷயத்தில் ஈடுபட்டு நந்தமிழ்ப் பாஷையை நன்னிலைக்குக் கொண்டுவரும்படி பெரிதும் விரும்பி வேண்டுகின்றனன். இவ்விஷயம் மல்லன்மாஞாலத்தமரும் நுண்ணறிவாளர்க்கெல்லாம் பெரிதும் புலனாமெனக் கருதி விரித்துரையாது விடுத்தாம்.

குறிப்பு:—நண்பர் திரு. சபாரத்தினன் அவர்களின் செந்தமிழ்ப் பற்றை யாம் பாராட்டுகின்றோம். ஆனால் அவர் கொண்டுள்ள கொள்கை முற்றிலும் ஒப்புக்கொள்ளத்தக்கதா என்னும் விஷயம் விவகாரத்திற்குரியது. ஆங்கில மொழிகளைத் தமிழ் மொழியில் கலக்கக்கூடாது என்பது அவரது வாதம். இஃது ஒரு வகையில் ஒப்புக்கொள்ளக்கூடியதாயினும் விஞ்ஞானம், அரசியல் முதலிய துறைகளில் சில புதுக் கருத்துக்கட்குத் தமிழ்ப் பிரயோக வாதம் சரிப்படுமா? வலிந்து சொற்களை அமைத்துக்கொள்ளலாமாயினும் அதனாற் போதரும் பயன் என்னை? ஏன் அச் சந்தர்ப்பங்களின் அந்நியச் சொற்களை அப்படியே அங்கீகரிக்கக் கூடாது? இதனால் எடுத்ததற்கெல்லாம் தமிழ்-ஆங்கில மணிப்பிரவாளத்தில் பேசவேண்டும் எழுதவேண்டும் என்று நாம் அபிப்பிராயப்படுவதாகப் பொருள்கொள்ளாதிருக்க நண்பரை வேண்டுகின்றோம். இன்றியமையாத சந்தர்ப்பங்களில் பிறமொழி வரினும் இழுக்கில்லை என்பதே நமது கருத்து. (ப. ர்.)



---

முட்டாள்கள் தவறு செய்தால் அதனால் அவர்க்கு விளையும் தீமையினின்று அவர்களைக் காப்பாற்றிவிட்டால், உலகத்தை முட்டாள்களால் நிரப்பியவர்களாவோம்.

# மகாத்மாவின் புறப்பாடு

சர்வகட்சி மகாநாட்டில் காங்கிரஸ் மகாசபையின் ஏகப் பிரதிநிதியாகக் கலந்துகொள்ள லண்டன் சென்ற மகாத்மா காந்தியடிகள், அங்கு ஆகவேண்டிய வேலைகள் முடிந்த பின்னர் இம்மாதம் 5-ந்தேதி காலை லண்டனை விட்டுப் புறப்பட்டார். அதற்கு முன்பே அதாவது நான்காம் தேதியே அவர் காலையில் பிரதம மந்திரி ஸ்ரீ. மக்டனல்டையும், மாலையில் இந்தியா மந்திரி சர். சாமுவேல் ஹோரையும் சந்தித்து நீண்ட நேரம் இந்தியாவின் பிரச்சினைகளைப் பற்றிப் பேசி அவர்களுடைய உள்ளக் கிடக்கையையும் அறிந்து கொண்டார். இந்திய சுயஆட்சி சங்கத்தின் மூலம் அவர் காங்கிரஸ் கோரிக்கையைப் பற்றி ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் காங்கிரஸ் பூரண சுயேச்சையையே கோருகிறதென்றும், ராணுவம், செல்வ விஷயம், வெளிநாட்டு விஷயம் முதலியவற்றிலும் பூரண ஆதிக்க மளிக்க வேண்டுமென்றும் இருதரப்பினரும் இஷ்டப்பட்டால் பிரிவதுள்பட இங்கிலாந்துடன் இந்தியாவுக்கு சம அந்தஸ்து அளிக்கப்படவேண்டுமென்றும், வற்புறுத்தப்பட்டிருக்கிறது. மேலும் அவ்வறிக்கை கூறுவதாவது:—நிஷ்பட்ச பாதமான ஒரு சபை விசாரணை செய்த பின்னர் இந்தியாவுக்கு நியாயமாக ஏற்படும் கடன் பொறுப்பைக் கழிக்க இந்தியா தயாராக இருக்கிறது. சிறுபான்மையோர் விஷயத்தை தேசீய தோரணையில் முடிவு செய்வதையே காங்கிரஸ் ஆதரிக்கிறது. ஆனால் அவசியத்தை யொட்டி சரித்திர காரணத்துக்காக முஸ்லிம்களுக்கும் சீக்கியருக்கும் சட்டசபையில் ஸ்தானங்கள் ஒதுக்க காங்கிரஸ் இஷ்டப்படும். தீண்டாதாரின் கட்சியைக் காங்கிரஸ் கவனிக்கும். தீண்டாமையை ஒழிக்க மகத்தான முயற்சி செய்யப்படும்போது தீண்டாதாரைத் தனித்து வைத்து தீண்டாமைக்குச் சட்டப்படி அந்தஸ்து ஏற்படுத்துவது தவறாகும். ஜாதி, வகுப்பு, மதம், நிறம் காரணமாக எவருக்கும் எவ்வித அரசியல் தடையும் ஏற்படுத்தப்படமாட்டாது. வயதான எல்லோருக்கும் ஓட்டுரிமை அளிக்கப்பட வேண்டுமென்பது காங்கிரஸ் கொள்கையாதலால் சிறுபான்மை சமூகத்தார் தேசத்துக்கு சேவைசெய்து அதன் மூலம் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதில் ஒருவித கஷ்டமும் இராது.

### மகாத்மாவின் பிரயாண வைபவம்

மகாத்மா 5-ந்தேதி காலை 4-மணிக்கே வழக்கம்போல் எழுந்து உலாவச் சென்று பின்னர் தமது கடமைகளை முடித்தார். அவர் பிரயாணப்படுகிறார் என்பதை யறிந்து அக்கம்பக்கத்திலிருந்தவர்களெல்லாம் அங்கு வந்து கூடி அவர் பிரயாணம் சுகமாக முடியவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். மகாத்மா தமது கோஷ்டியினருடன் 9-மணிக்கெல்லாம் விக்டோரியா ஸ்டேஷனுக்கு வந்தார். பல ஐரோப்பியர்களும் இந்தியர்களும் ஸ்டேஷனில் கூடி பிரிவுபசாரம் கூறினர். பண்டித மாளவியா இன்னும் சிறிது காலம் அங்கேயே இருப்பதால் அவரிடம் மகாத்மா தனியே சிறிது நேரம் பேசினர். புகைப் படங்கள் பிடிக்கப்பட்டன. ரயிலும் வந்தேமாதர கோஷத்திடையே புறப்பட்டது.

### மகாத்மாவின் பிரிவுச் செய்தி

மகாத்மா லண்டனை விட்டுப் புறப்பட்ட சமயத்தில் ராய்ட்டர் பிரதிநிதியின் மூலம் பிரிட்டிஷாருக்கு முடிவான செய்தியை வெளியிட்டார். அதன் சாராம்சமாவது:—"நான் இந்தியாவுக்குத் திரும்புவதுபற்றிச் சந்தோஷப்படுகிறேன். ஆனால் இங்கிலாந்தைவிட்டுச் செல்வதில் எனக்கு வருத்தமும் ஏற்படுகிறது. நான் ஆங்கிலேயருடன் போராட்டம் நடத்தினாலும் அது துவேஷத்தினால் நடத்தப்படுவதல்ல. என் நெருங்கிய பந்துக்கள் சிலருடனேயே நான் போராட நேர்ந்திருப்பதேபோல் அன்புடனேயே இப்போராட்டத்திலும் இறங்குகின்றேன். இதை பிரிட்டிஷார் நம்பவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தேசீய கௌரவத்துக்குப் பங்கம் வராதவரை பிரிட்டனுடன் ஒத்துழைத்துவர என்னாலியன்ற முயற்சியை நான் செய்வேன். ஆனால் வங்காள அவசரச்சட்டத்தைப் படிக்கப் படிக்க எனக்குச்சந்தேகமும் அச்சமும் அதிகப்படுகிறது. இச்சட்டம் மிக மோசமானதாக இருக்கிறது. ஆங்கிலேயரிடம் துவேஷம் பாராட்டாமல் சுதந்தரப் போராட்டத்தை நடத்தும்படி இந்தியரை எப்போதும் நான் கேட்டு வந்திருக்கிறேன். நான் இங்கிலாந்தில் சுற்றுப் பிரயாணம் செய்ததன் பயனாக ஆங்கிலேயரிடம் சிறிதும் குரோத புத்தி காட்டவே கூடாதென என் தேச மக்களிடம் நான் இன்னும் அதிகமாக வற்புறுத்துவேன். சாமான்ய பிரிட்டிஷார் இந்திய நிலைமையைப் பற்றி ஒன்றுமே அறியவில்லை. பிரிட்டிஷார் சுபாவமாகவே இந்தியாவினிடம் அனுதாபம் காட்டுகிறவர்களாக இருக்கின்றனர்.

### பாரிஸில் காந்திஜி

மகாத்மாகாந்தி 5-ந்தேதி பகல் 4 மணிக்கு பிரான்ஸ் தேசத்தின் தலைநகரான பாரிஸுக்கு விஜயம் செய்தார். இந்தியர்கள் பலரும் போலீஸ் படையினரும் கூடியிருந்து வரவேற்றனர். செயின்ட்லாஸேர் என்னும் பகுதியிலுள்ள டர்மினஸ் ஓட்டலில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. மகாத்மா தக்கபடி பதில் அளித்தார். பின்னர் அதே இடத்திலுள்ள ஸ்ரீ. ரொமெய்ன் ரோலண்டின் சகோதரியான மாடம் கிபியின் மாளிகைக்குச் சென்று அன்றிரவு முழுதும் தங்கினார். 5-ந் தேதி மாலை பாரிஸிலுள்ள, அழகாக அலங்கரிக்கப்பட்ட டான்ஸ் ஹாலில் சுமார் இரண்டாயிரம்பேர் கூடியிருந்த கூட்டத்தில் பிரசங்கம் செய்தார்.

### ரோலண்டுடன் காந்திஜி

காந்திஜியின் நண்பரான ஸ்ரீ. ரொமெய்ன் ரோலண்டின் அழகிய மாளிகை ஜினிவா ஏரிக்கரையில் வில்லினோ கிராமத்தை நோக்கி ஒரு குன்றின்மீது இருக்கிறது. மகாத்மா 6-ந்தேதி காலை சுமார் 8-மணிக்கு பாரிஸைவிட்டுப் புறப்பட்டு வில்லினோகிராமத்துக்குரிய ரயில்வே ஸ்டேஷனாகிய மாண்டிரியில் இறங்கி ரோலண்டின் பங்களாவுக்கு வந்தார். மாண்டிரி ஸ்டேஷனிலும் அவர் சிறப்பாகவே வரவேற்கப்பட்டார். அங்குள்ள ஜனங்களெல்லாம் மகாத்மாவைப்பற்றி முன்னரே அறிந்திருந்தபடியால் அவரைக் காண ஆவலாக இருந்தனர். இந்திய மகாஜனங்களுக்கு அவர் வெளியிட்ட செய்தியில், இந்தியர் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரக் கூடாதென்றும், தாம் வெளியிடப்போகும் அறிக்கையை அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும் அறிவித்துள்ளார். காந்திஜி 11-ந்தேதி வெள்ளிக்கிழமை வில்லினோவை விட்டுப்

புறப்பட்டு வழியில் ரோமாபுரிக்குச் செல்வார். பிறகு பிரிண்டிஸி சென்று அங்கிருந்து 14-ந்தேதி இந்தியாவுக்குப் புறப்படுவார்.

## மகாத்மாவின் உருக்க மொழி

சென்ற நவம்பர் மாதம் 19ந் தேதியன்று சமஷ்டி அரசியல் கமிட்டியின் கூட்டத்தில் மகாத்மா காந்தி காங்கிரஸின் பொருட்டு சில அபிப்பிராயங்களை தெரியப்படுத்தினர். இந்தியாவில் அல்லது இந்தியாவுடன் வியாபாரம் செய்யும் பிரிட்டிஷ் வியாபாரிகளின் நன்மையைப் பாதுகாக்க அரசியல் சட்டத்தில் சில பந்தோபஸ்துகள் செய்யப்பட வேண்டுமென்று பிரிட்டிஷ் வியாபாரிகள் கொண்டாடும் பாத்யத்தைப்பற்றிக் காங்கிரஸிற்குள்ள அபிப்பிராயங்களை அப்பொழுது மகாத்மா வெளியிட்டார். சென்ற வருஷத்தில் இவ்விஷயமாக சர்வகட்சி மகாநாட்டில் செய்யப்பட்ட தீர்மானத்தை அவர் எதிர்த்துப் பேசிவிட்டு பட்டினிகிடக்கும் இந்தியர்களின்பொருட்டே வேற்றுமை பாராட்டப்பட வேண்டுமென்று சொன்னர்.

### சென்ற ஆண்டின் தீர்மானம்

சென்ற ஆண்டுக் கூட்டத்தில் செய்யப்பட்ட தீர்மானத்தை நான் அலசிப் பார்த்தேன். அந்தத் தீர்மானம் உங்களுக்குத் தெரிந்ததேயாயினும் அதைப் படித்துக் காட்டுகிறேன்; ஏனெனில் அதைப்பற்றி சில விஷயங்களை நான் சொல்ல விரும்புகிறேன். "இந்தியாவில் வியாபாரம் செய்யும் பிரிட்டிஷ் வர்த்தகர்கள், கம்பெனிகள் முதலியவைகளுக்கும் இந்தியப் பிரஜைகளுக்கும் ஒரு வித்தியாசமும் பாராட்டக்கூடாது என்று பிரிட்டிஷ் வர்த்தகர்கள் பிரேரணை செய்தபடி தீர்மானிக்கப்பட்டது" என்பது பிரஸ்தாபத் தீர்மானம்.

இந்தத் தீர்மானத்தை நீங்கள் கவனித்துப் படித்தால் அதன் குணம் தெரியவரும். இந்தியாவில் வியாபாரம் செய்யும் பிரிட்டிஷ் வர்த்தகர்கள், கம்பெனிகள் முதலியவைகளுக்கும், இந்தியப் பிரஜைகளுக்கும் வித்தியாசம் பாராட்டப்படக்கூடாதாம்! இதனுடைய பொருளை நான் சரியாகக் கிரகித்திருப்பதாக நினைக்கிறேன். அப்படியாயின், எனதபிப்பிராயப்படி இந்தத் தீர்மானமானது ஒரு பயங்கரமான தீர்மானம், காங்கிரஸ் இதை ஒப்புக் கொள்ள முடியாது. பிற்கால இந்திய கவர்ன்மெண்டு இந்தத் தீர்மானத்தால் கட்டுப்படக்கூடாது.

தீர்மானத்தில் எவ்வித நிபந்தனையும் சொல்லப்படவில்லை. பிரிட்டிஷ் வியாபாரிகள் இப்பொழுது அனுபவிக்கும் உரிமைகள் அப்படியே யிருக்க வேண்டுமாம். இந்தியர்களுடைய உரிமைகளை அவர்கள் அனுபவிப்பார்கள் என்று உறுதிகூறவும் நான் இஷ்டப்படவில்லை. இப்பொழுதுள்ள கவர்ன்மெண்டு செய்யத் தவறிவிட்ட காரியங்களைப் பிற்கால இந்தியக் கவர்ன்மெண்டு செய்யவேண்டியிருக்குமென்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள். அதாவது கடவுளுடைய அனுக்கிரகத்தாலோ அல்லது கவர்ன்மெண்டின் அனுக்கிரகத்தாலோ பணக்காரர்களாக வுள்ளவர்களைப் புறக்கணித்து பட்டினி கிடக்கும் இந்தியர்களுக்குச் சலுகை காட்டவேண்டியிருக்கும். தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கவேண்டி யிருக்கலாம். அப்பொழுது பணக்காரர்களாக வுள்ளவர்கள் "அவர்களுக்கு நீங்கள் வீடு கட்டிக்கொடுத்தால் எங்களுக்குப் பணமாகக் கொடுத்துவிடவேண்டும். அப்படிப்பட்ட வீடுகள் எங்களுக்குத் தேவையில்லை" என்று சொல்லலாம். அப்பொழுது

தொழிலாளர்களுக்குச் சலுகை காட்டவேண்டியிருக்கும், பணக்காரர்கள் கவர்ன்மெண்டார் பட்சபாதமுள்ளவர்கள் என்று சொல்லக்கூடும். ஆகையால் இந்தத் தீர்மானத்தை இந்த மகாநாடு ஒப்புக்கொள்ள முடியாதென்று நான் நினைக்கிறேன்.

### ஜாதிக்காக வேற்றுமை

ஆயினும் ஜாதிக்கு ஜாதி வித்தியாசம் பாராட்டக் கூடாதென்று பிரிட்டிஷ் வியாபாரிகள் கேட்பது நியாயமே, அதை நான் ஆதரிக்கிறேன். ஜாதி வித்தியாசம் பாராட்டுவதை எதிர்த்துத் தென் ஆபிரிக்கா கவர்ன்மெண்டுடன் இருபது வருஷ காலம் சண்டை செய்த நான் இந்தியாவில் இப்பொழுதுள்ள அல்லது இனிமேல் இந்தியாவுக்கு வரக்கூடிய பிரிட்டிஷார்களுக்கு விரோதமாகச் சட்டமியற்ற உடன்படமாட்டேன். காங்கிரஸின் அபிப்பிராயமும் அதுவே.

### சுதந்தர இந்தியா செய்யும் வேலை

இந்தியா ஸ்வாதீனம் பெற்றுவிடின், உலகிற்கு வேறு வழி காட்டுமென்று நான் நம்புகிறேன். மற்ற தேசங்களுடன் கொடுக்கல் வாங்கல் அற்று, அன்னியர்களுடன் வியாபாரம் செய்யாமல் இந்தியா தனித்து வாழவேண்டுமென்று நான் விரும்பமாட்டேன். ஆனால் வித்தியாசமான நிலைமைகளிலுள்ளவர்களின் நிலைமைகளை ஒரு மட்டப்படுத்த அநேக காரியங்களைச் செய்ய வேண்டி யிருக்கும். காலின் கீழ் மிதிக்கப்பட்டவர்கள், பதிதர்கள் முதலியவர்களைச் சேற்றிலிருந்து தூக்கிவிட இந்தியாவானது பல வருஷங்கள் செல்லும்வரையில் சட்ட மியற்றவேண்டி யிருக்கும்; முதலாளிகளாலும், ஜெமீன்தார்களாலும், உயர் வகுப்பினர் என்று சொல்லப்படுகிறவர்களாலும், கடைசியில் சாஸ்திர ரீதியாக பிரிட்டிஷ் ராஜ்யாதிகாரிகளாலும் மிதிக்கப்பட்டுக் கீழேவிழுந்து கிடக்கிறவர்களைத் தூக்கிவிட சட்டமியற்ற வேண்டியிருக்கும். சேற்றிலிருந்து இந்த ஜனங்களைத் தூக்கிவிட வேண்டுமானால், இந்தியாவின் தேசீயக் கவர்ன்மெண்டு தன்னுடைய கடமைகளைச் செய்யவேண்டுமானால், இந்த ஜனங்களுக்கு அது சலுகை காட்டவேண்டி யிருக்கும்.

இன்று சலுகைகளை அனுபவிக்கிறவர்கள்—அவர்கள் இந்தியர்களாயினும் ஐரோப்பியர்களாயினும் சரி—ஜெமீன்தார்கள், நிலத்தின் சொந்தக்காரர்கள் முதலியவர்கள் தங்களுக்கு விரோதமாகச் சலுகை காட்டப்படுகிறதென்று நினைப்பார்களானால், நான் அவர்களுக்கு உதவி செய்ய முடியாது. சேற்றிலிருந்து இந்த ஜனங்களைத் தூக்கிவிட அவர்களுடைய உதவியையும் நான் நாடுவேன்.

### தாழ்த்தப்பட்டவர் துயரம்

தயவு செய்து தீண்டாதாரின் நிலைமையைக் கவனியுங்கள். இப்பொழுது அவர்களுக்கு நிலமேயில்லை, இப்பொழுது அவர்கள் உயர் வகுப்பினர்களின் தயவையும் கவர்ன்மெண்டின் தயவையும் எதிர்பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். வித்தியாசத்தைச் சரிப்படுத்த அவர்களுக்கு இனம் கொடுக்கும்படி முதலில் சட்டமியற்றவேண்டியிருக்கும். யாருடைய பணத்தை எடுத்து அவர்களுக்கு இனம் கொடுப்பது? கடவுள் கொடுக்கப்போகிறாரா? ஐரோப்பியர்கள் உள்பட பணக்காரர்களின் பணத்தைக்கொண்டே அவர்களுக்கு இனம் கொடுக்கவேண்டியிருக்கும். இன்றேல்

உள்ளவனுக்கும் இல்லாதவனுக்கும் போராட்டமேயாகும். அப்படிச் செய்யப்படுமென்று பயப்படின், தேசியக் கவர்ன்மெண்டு எப்படி உதிக்கமுடியும்?

## இப்போதைய உரிமைகள்

அது இப்பொழுதுள்ள பாத்தியங்களைப் பற்றியது. "தேசமகா ஜனங்களின் நன்மைக்குக் கேடுவிளைவிக்காததும் கிரமமாக சம்பாதிக்கப்பட்டதுமான எந்த உரிமையும் அப்படிப்பட்ட உரிமைகளுக்குப் பிரயோகிக்கப்படக் கூடியது தவிர வேறு சட்டத்தால் பாதிக்கப்படக்கூடாது" என்பது நான் தயாரித்துள்ள வாசகம். இதைப் பற்றி என் மனதில் உள்ளதைச் சொல்லுகிறேன். இப்பொழுதுள்ள பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்தியாவின் பெயரால் வாங்கியிருக்கிற கடன்களைப் பற்றி காங்கிரஸ் செய்திருக்கிற தீர்மானம் உங்களுக்குத் தெரியும். இந்தக் கடன்களை நாங்கள் ஒப்புக் கொள்ளுமுன் பட்சபாதமற்ற ஒரு சபை அவைகளைப் பற்றி விசாரிக்கவேண்டுமென்று காங்கிரஸ் கேட்கிறது. கடன்களை நாங்கள் ஒப்புக்கொள்ள மாட்டோம் என்று சொல்லவில்லை. கணக்கு வழக்குகளைச் சோதனை செய்யவேண்டுமென்பதே எங்களது கோரிக்கை. ஐரோப்பியர்களிலும் இந்தியர்களிலும் அநேகர் கவர்ன்மெண்டிடமிருந்து இனாமாக நிலம் பெற்றிருக்கிறார்கள். கவர்ன்மெண்டுக்கு அல்லது தேசத்திற்கு அவர்கள் செய்த ஊழியத்திற்குப் பிரதிப் பிரயோஜனமாக அந்த நிலங்கள் கொடுக்கப்பட்டனவல்ல! ஆனால் யாரோ ஒரு உத்தியோகஸ்தருக்கு அவர்கள் செய்த ஊழியத்திற்காக அவை கொடுக்கப்பட்டவை.

## புது டில்லியாகிய வெள்ளை யானை.

"தேசமகா ஜனங்களின் நன்மைக்கு விரோதமில்லாத" என்ற சொற்களை எடுத்துக்கொள்வோம். கிரமமாக சம்பாதிக்கப்பட்ட சில ஏகதேச பாத்யங்களை நினைத்து இந்தச் சொல் தொடரை எழுதியிருக்கிறேன். கிரமமாக அவை சம்பாதிக்கப்பட்டவையாயினும், தேசத்தின் நன்மைக்கு விரோதமானவை. ஒரு உதாரணம் சொல்லுகிறேன். அது வேடிக்கையாக விருக்கும். புது டில்லி என்ற வெள்ளை யானையை எடுத்துக்கொள்ளுங்கள். அதன் பொருட்டு கோடி, கோடியாகப் பணத்தைச் செலவு செய்தாகிவிட்டது. இந்த வெள்ளை யானையை ஏதேனும் ஒருவிதமாக உபயோகப்படுத்த வேண்டுமென்று பிற்கால கவர்ன்மெண்டு நினைப்பதாக வைத்துக் கொள்வோம். பழைய டில்லியில் காலரா பரவியிருக்கிற தென்றும், ஏழைகளுக்காக ஆஸ்பத்திரி ஏற்படுத்த வேண்டுமென்றும் வைத்துக் கொள்ளுங்கள். ஆஸ்பத்திரியா கட்டுவார்கள்? இல்லை. இந்தக் கட்டடங்களை ஆஸ்பத்திரியாக உபயோகப்படுத்தி விடுவார்கள். இவை தேசத்தின் நன்மையை உத்தேசித்தவையல்ல. போபால் நவாப் சாஹிப், ஸர். புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ், ஸர். டேஜ் பகதூர் ஸாப்ரூ முதலியவர்களின் அந்தஸ்திற்குப் பொருந்தியவைகளாக அந்தக் கட்டடங்கள் இருக்கலாம். ஆனால் படுக்க இடமிராதவர்களாகவும் தின்னச் சோறு இல்லாதவர்களாகவும் உள்ள கோடிக்கணக்கான ஜனங்களின் நிலைமைக்கு இந்தக் கட்டடங்கள் பொருந்தியவையல்ல. அவை அநாவசியமென்று தேசிய கவர்ன்மெண்டு நினைக்குமானால், அவைகளை அது கைப்பற்றிக்கொண்டு விடும். பதிலுக்கு ஒன்றுங் கொடுக்காது. நஷ்டஈடு செய்ய கவர்ன்மெண்டு கடைத்தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கவேண்டியிருக்கும்.

# நேயர்களுக்கோர் சந்தோஷச் செய்தி.



நாம் இதுகாறும் 'ஆனந்தபோதினி' மாத, வாரப்பத்திரிகைகளை வெளியிட்டு சமூகத்தொண்டு செய்து வருவது போலவே இனியும் அடுத்த ஜனவரிமாதம் முதல் காலணா வாரப்பத்திரிகை யொன்றை நடத்துவதென்றும், ஏஜெண்டுகளுக்கு நூற்றுக்கு 50-வீதம் கமிஷன் கொடுப்பதென்றும் தீர்மானித்திருக்கிறோம். ஒவ்வொரு ஊரிலுமுள்ள ஏஜெண்டுகள் எவ்வளவு பிரதிகளை விற்க முடியும் என்பதைத் தெரியப்படுத்தும்படி கேட்டுக் கொள்கிறோம். ஏஜெண்டுகள் நிபந்தனைகளுக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

மானேஜர்.

# வெளிநாட்டு சந்தா நேயர்களுக்கு ஒரு அறிக்கை.



மலாய் நாடு, சைகோன், ஜாவா, ஆபிரிக்கா, அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய வெளிநாடுகட்குப் பத்திரிகைத் தபால் கட்டணம் ஒரு அணாவாக இருந்தது 1–12–31-ம் தேதி முதல் ஒன்றரை அணாவாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆதலால் நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை வெளிநாட்டுச் சந்தா நேயர்கட்கு வருஷ சந்தா ரூ. 1—8—0 ஆக இருந்ததை ரூ. 2—0—0 ஆக உயர்த்தியிருக்கிறோம் என்னும் விவரத்தை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறோம். நம்பால் அன்பு நிறைந்த சந்தாநேயர்கள் இது முதல் ஏழு மாதங்கட்கு அதிகப்படியாகும் தபால் செலவை அனுப்பிவைத்து உதவிபுரிவார்கள் என்றும் எதிர்பார்க்கிறோம்.

மானேஜர்.




"எதிர்பார்த்த பையன்"

காரியாலயத்தில் முதலில் எடுபிடி வேலைக்கு அமர்ந்திருந்த பையனிடம் ஒழுங்கு முறையும், சுறு சுறுப்பும் இல்லாமையால் அவன் வேலையினின்றும் நீக்கப்பட்டான். அந்த வேலைக்கு இருபது விண்ணப்பங்கள் வந்திருந்தன. முதலாளி சுறு சுறுப்பும் புத்திக் கூர்மையும் உள்ள ஒரு பையனை அழைத்து பரிசோதிக்கிறார்.

முதலாளி:—"எனக்கு ஒரு நல்ல பையன் தேவை. சுறு சுறுப்பும், புத்திக் கூர்மையும், ஒழுங்கும் உள்ளவனுயிருக்கவேண்டும். அவன் காரியாலயத்தைச் சுத்தமாயும் ஒழுங்காயும் வைத்திருக்கக் கூடியவனுயிருக்கவேண்டும். எந்த எந்த வஸ்து எங்கெங்கு இருக்க வேண்டுமோ அந்த அந்த வஸ்து அங்கங்கு இருக்கும்படி அவன் ஜாக்கிரதையாய்க் கவனித்துக் கொள்ளவேண்டும். நான் சொன்னதைத் தெரிந்துகொண்டாயா?"




பையன்:—"ஆமாம் எஜமான்! அப்படியே ஆகட்டும். நான் தங்கள் கோட்டுப் பொத்தானை ஒழுங்காக மாட்டி, கழுத்து "டை"யையும் ஒழுங்காகக் கட்ட இப்பொழுதே வேலை தொடங்கலாமா?"

***

நோயாளி:—"நீங்கள் அனுப்பிய "பில்" கண்டபோது என் உடம்பு முழுதும் எரிச்சல் கண்டுவிட்டது!"

டாக்டர்:—"அந்த எரிச்சல் தணிய நான் மருந்து கொடுக்கிறேன். அதன் விலை ரூபாய் பத்தாகும்."

***

ரிபோர்ட்டர் பிரசங்கத்தைக் குறித்துக்கொண்டிருந்தார்.

பிரசங்கியார்:—"நீங்கள் அவ்வளவு விரைவாக எழுதிக்கொண்டுபோனுல் என்னுல் பிரசங்கம் செய்ய முடியாது."

"திருப்தி"

பெரியவர்:—(கூலியைப் பார்த்து) "கும்பகோணத்திற்கு ரயில் எப்போது புறப்படும்?"




கூலி:—(நிதானமாய்) "நாலரைக்குப் புறப்படும்."

பெரியவர்:—(கொஞ்சம் செவிடு) "என்ன?"

கூலி:—"நாலரை" என்று சொல்லிக்கொண்டே கோபமாய்த் திரும்பி விட்டான்.

பாவம்! பெரியவருக்கு அக்கூலி கூறிய விடை திருப்தி அளிக்கவில்லை. இன்னொரு கூலியிடம் வந்து அதே கேள்வியைக் கேட்டார்.

மற்றவன்:—(கொஞ்சம் சப்தமாய்) "சாயங்காலம் 4-30-மணிக்கு ஒரு வண்டி போகும் சார்!"

பெரியவர்:—"அப்படிச் சொல். சந்தோஷம்! அதோ அந்தப் பையல் நாலை இரவு போகும் என்று சொன்னான்."

***

"அன்புள்ள மனைவி"

கணவன்:—"உன்னைக் கட்டிக்கொண்டு மாரடிப்பதை விடத் தற்கொலை செய்து கொள்ளுவது மேல் என்றே நினைக்கிறேன்."



மனைவி:—"நீங்கள் சொன்ன எந்தக் காரியத்தைத்தான் நிறைவேற்றியிருக்கிறீர்கள்?"

***

ஒருவன்:—"நம்ம கருப்பண்ணன் குடியை நிறுத்திவிட்ட சங்கதியை நீ கேள்விப்பட்டாயா?"

மற்றவன்:—"நான் கேள்விப்பட வில்லையே, ஆனால் அவன் இறந்து எத்தனை நாளாயிற்று?"

***

சுப்பன்:—"நான் பத்தாவது வருஷத்திலேயே பிடில் வாசிக்கக் கற்றுக் கொண்டேன்."

சேஷன்:—"ஆனால் எந்த வருஷத்தில் மறந்துவிட்டாய் என்பதைச் சொல் பார்க்கலாம்."

## "வேடிக்கை"

இளைஞன்:—(சர்க்கஸ் யானைப் பாகனைப் பார்த்து) இந்த யானை மிகவும் புத்திசாலித்தனம் உள்ளது என்று தெரிகிறதே."

பாகன்:—"புத்திசாலித்தனமா? அநேக அற்புத வேடிக்கைகளையெல்லாம் செய்யுமே."

இளைஞன்:—(வியப்புடன் யானையைப் பார்த்துக் கொண்டே) "அப்படியா?"




பாகன்:—"இதில் என்ன சந்தேகம்? நாங்கள் உயரத்திலிருக்கிற அந்தப் பெட்டியில் பணம் போடும் வித்தையுங்கூடக் கற்றுக்கொடுத்திருக்கிறோம்."

இளைஞன்:—"அப்படியானால் இந்த ஒரு ரூபாயைப் பெட்டியில் போடும்படி சொல்லுங்கள் பார்க்கலாம்."

யானைப் பாகன் கட்டளைப்படி இளைஞனது ரூபாயை எடுத்து உயரத்தில் சுவரில் இருந்த பெட்டியில் போட்டுவிட்டது யானை.

இளைஞன்:—"ஆஹா! வெகு அற்புதம்! நல்ல வேலை செய்கிறது. இனி அந்த ரூபாயை எடுத்து என் கையில் கொடுக்கும்படி சொல்லுங்கள். அதையும் நான் பார்த்து மகிழவேண்டும்."

பாகன்:—"நாங்கள் இன்னும் அந்த வித்தையை அதற்குக் கற்பித்துக் கொடுக்கவில்லை."

***

யாத்திரிகர்:—இவ்விடத்தில் இரவில் படுக்க இடங்கிடைக்குமா?

வீட்டுக்காரர்:—"தங்கள் நாமதேயம்?"

யாத்திரிகர்:—"சிவ ராம கிருஷ்ண சாஸ்திரி"

வீட்டுக்காரர்:—"இங்கே நான்கு பேருக்கு இடம் இல்லை போங்கள்"

***

டாக்டர்:—"உங்கள் தேகம் ஸ்தூலம் ஆகாமல் சன்னம் ஆகவேண்டுமானால் பழமும் பாலும் மாத்திரம் உட்கொண்டு ஆரஞ்சுப் பழ ரஸத்தையும் சேர்த்துக்கொண்டு வரவேண்டும்."

மிராஸ்தார்:—"சாப்பாட்டுக்கு முன்னா பின்னா?"

***

பையன்:—"அப்பா! நீங்கள் எனக்கு ஒரு ரூபாய் கொடுத்ததாக இரவில் கனவு கண்டேன்."

தந்தை:—"ஆனால் அந்த ரூபாயை நீயே வைத்துக்கொண்டு எதையேனும் வாங்கிக்கொள் மகனே!"

"கூலி"



கூலி:—அம்மணீ! சாமான்களைத் தூக்கட்டுமா?"

பெண்:—"நீ யார்? நீ எங்கே வந்தாய்?"

கூலி:—"அம்மா! நான் ரயில் கூலி. சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டுபோய் வண்டியில் ஏற்றட்டுமா?"

பெண்:—"என் கணவன் மலை போல நிற்க நீ எதற்கடா வந்தாய்?"

***

பெரிய மனிதர்:—"இந்தக் கல்லை யார் போட்டது. என் தலையில் சரியான அடிவிழுந்தது!"

வஸ்தாது:—"நான் தான் போட்டேன்! என்ன செய்யலாம் என்பது உன் உத்தேசம்?"

பெரிய மனிதர்:—"உங்கள் கல்லை உங்களுக்குக் கொடுக்கலாம் என்று கொண்டு வந்தேன்."

***

வியாபாரி:—"உனது யோக்கியதையைக் குறித்து நீ கொண்டுவந்த சர்டிபிகேட்டுகளெல்லாம் நன்றாகவே இருக்கின்றன. எல்லாவற்றையும் நீயே எழுதினையா?"

ஒருவன்:—"எல்லாம் நானே எழுதினேன். கையெழுத்துக்கள் மாத்திரம் என் தகப்பனார் செய்தார்."

***

ஒருவன்:—"அந்த மூலையில் உட்கார்ந்திருக்கிற குறும்புக்காரப் பையன் யார்?"

மற்றவன்:—"என் தம்பி."

ஒருவன்:—"உங்கள் இருவருக்கும் வித்தியாசம் தெரிந்துகொள்ளாமல் போன குற்றம் என்னைச் சார்ந்தது. தயைகூர்ந்து மன்னிக்கவேணும். ஒரே மாதிரி இருக்கிறீர்களே!"

***

சுப்பன்:—"உனக்கு என்ன உத்தியோகம்?"

குப்பன்:—"வரி வசூல் செய்வது."

சுப்பன்:—"ஓஹோ! ஆனால் உன்னைக் கண்டால் யாருக்கும் விருப்பம் இருக்காதே."

குப்பன்:—"இல்லாமல் என்ன? யாரிடம் போனாலும் எல்லாரும் மறுபடியும் வரும்படியே சொல்லுகிறார்கள்."

## "வழி காட்டல்"

மோட்டார் பெரிய மனிதர்:—(வழிப்போக்கனை நோக்கி) "இதோ இங்கே வா ஐயா! பல்லாவரம் போகும் வழி எது?"

வழிப்போக்கன்:—"வாயினால் சொன்னால் உங்களுக்குத் தெரிந்து கொள்ளுவது கஷ்டம். என்னை உங்கள் காரில் உட்காரவைத்துக்கொண்டு போனால் நான் போகும் வழியைக் காட்டிவிடுவேன்."

பெரிய மனிதர்:—"நல்லது! ஏறி உட்கார் காரில்!"




வழிப்போக்கன்!—(காரில் உட்கார்ந்தவுடன்) முதலில் தலைக்கு நேராய் இரண்டு மைல் தூரம் காரை விடுங்கள்."

இரண்டு மைல் தூரம் சென்றவுடன் வழிப்போக்கன் கூறுகிறான்: "தயவுசெய்து காரை நிறுத்தி என்னை இறக்கிவிடுங்கள். நான் உங்களுக்குப் பாக்கி வழியையும் காட்டி விடுகிறேன்."

அவ்வாறே இறக்கிவிட்ட பிறகு மறுபடியும் வழி காட்டுகிறான்.

"தயவு செய்து காரை வந்த வழியே திருப்பி மூன்று மைல் சென்றால் நீங்கள் விரும்பும் இடம் போய்ச் சேர்வீர்கள்."

பெரிய மனிதர்:—"அடபாவி! என்னை ஏன் இவ்வளவு தூரம் இழுத்தடித்தாய். அங்கேயே சொல்லியிருந்தால் ஒரு மைல் தூரந்தானே—சிரமமில்லாமல் போயிருப்பேனே."

வழிப்போக்கன்:—(சாதாரணமாய்) "நான் இங்கேதான் வசிக்கிறேன். நான் புது வஸ்திரமும் சொக்காயும் அணிந்திருப்பதை நீங்கள் கவனிக்கவில்லை போலும்."

———:(o):———

## தபால் கட்டண உயர்வு



இந்த டிசம்பர் 15-ந்தேதி முதல் போஸ்ட்கார்டின் கட்டணம் முக்காலணா—பதில் வரக்கூடிய இரட்டைக் கார்டு ஒன்றரையணா. இரண்டரை தோலா எடையுள்ள கடிதங்களுக்குக் கட்டணம் 0—1—3 இதற்கு மேலுள்ள ஒவ்வொரு இரண்டரை தோலாவுக்கும் அதன் பாகத்துக்கும் 0-1-3 தலையொட்டா கார்டு போட்டால் கிழித்தெறியப்படும். உள்நாட்டு தந்தி மணியார்டருக்கு அதிகப்படி இரண்டணா வாங்கப்படும்.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

(399-ம் பக்கத் தொடர்ச்சி.)

"ஆம். ஒரு உயிரைப்பற்றித்தான்!" என்று விடை பகர்ந்தார். நான் எண்ணியது உண்மைதானே? ஒரு ஜீவனைக் கொலை செய்யும்படித்தான் அம் மனிதர் என்னிடம் சொல்லப்போகிறாரோ? ......அல்லது அந்த ஜீவனைக் காப்பாற்றுவதற்குத்தான் என்னுடைய உதவியை நாடுகின்றாரோ? என்முன்னால் என்னை உற்று நோக்கிக்கொண்டிருந்த அவ் வயோதிகர் மேற்கூறிய இரண்டு காரியங்களில் எதைச் செய்யும்படிச் சொல்லப்போகிறாரோ வென்று நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகப் பதை பதைத்துக்கொண்டிருந்தேன். ஒரு டாக்டரால் ஒரு உயிரைக் காப்பாற்றுவ்தும் முடியும்; அதைக்கொல்லுவதும் முடியும். காப்பாற்றல் சுலபம்; கொல்லல் அதைவிடச் சுலபம்......அடுத்த நிமிஷம் அம் மனிதர் என்ன சொல்லிவிடப் போகிறாரோ, அதற்கு நான் என்ன பதில்சொல்ல வேண்டுமோ என்றிவ்விதம் என் மனம் துடி துடித்துக்கொண் டிருந்தது. அவர் சொல்லப் போகும் ஒவ்வொரு வார்த்தையையும் நன்றாகக் கேட்டுக்கொள்ளவேண்டும் என்ற ஆவலுடன் என் செவிகளை நன்றாகச் செலுத்திக்கொண் டிருந்தேன்; என்றாலும் என் மனதில் பெருத்த குழப்பம் ஏற்பட்டுவிட்டது. நான் அங்கு உட்கார்ந்திருப்பதே கனவோ அல்லது நினைவோ யென்று நினைக்க ஆரம்பித்து விட்டேன்.

இம்மாதிரியான துடிதுடிப்பான நிலைமையில் நானிருக்கும்போது அம் மனிதர் என்னைப் பார்த்து மிகவும் அழுத்தமான குரலில் "ஐயா! டாக்டரவர்களே! நமது காரியத்தைப்பற்றி மேன்மேலும் நாம் பேசுவதற்குள்ளாக நம்முள் ஒரு உடன்படிக்கை யுண்டாக வேண்டும். அதாவது நீங்களும் நானும் இப்பொழுது பேசிக்கொண்டிருப்பது வேறு எவருக்கும தெரியக்கூடாது. இந்த ரகசியத்தைக் காப்பாற்றுவதாக முதலில் எனக்கு வாக்குறுதி கொடுங்கள்" என்றார். உடனே நான் "நீங்கள் சொல்லுகிறபடியே ஆகட்டும்" என்று மெதுவான குரலில் பதிலுரைத்தேன்.

---

ஐய நீக்கி மெய்யை நோக்கு.

அந்தச் சமயத்தில் என் மூளை குழம்பியது. என்னைப் பணத்தினால் வயப் படுத்த உத்தேசித்திருக்கும் அம் மனிதனது முகத்திலேயே விழிக்கக் கூடா தென்ற வெறுப்பான எண்ணம் எனக்கு உண்டாயிற்று.

"நல்லது; இவ் விஷயத்தை நீங்கள் இரகசியமாகக் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்துவிட்டீர்க ளாதலால் இனி முக்கியமாகக் காரிய விசேஷத்தைப்பற்றியே பேசுவோம்......தங்களுக்குக் கலியாணம் ஆகவில்லை யென்றே என் மனதிற் படுகிறது! அப்படித்தானே?" என்று அம் மனிதர் மிகுந்த திருப்தியுடன் என்னைப் பார்த்துக் கேட்டார்.

இதைக்கேட்டதும் எனக்குத் தாங்கமுடியாத ஆச்சரியம் உண்டாயிற்று. இருந்தாலும் அவரது கருத்து இன்னதுதா னிருக்கவேண்டுமென்று யூகித்தவனாய் "எனக்கு இன்னும் கலியாண மாகவில்லை; எனக்குக் கலியாணம் செய்து கொள்ளுவதற்கும் இஷ்டங் கிடையாது" என்று அவரைப் பார்த்துச் சொல்ல அவர் ஏதோ நான் சொல்லுவதைக்கேட்டு வியப்புற்றவர்போல் "ஓஹோ! உங்களுக்குக் கலியாணஞ் செய்துகொள்ள இஷ்டமில்லையோ? இதெல்லாம் அறியாப் பிள்ளையின் பேச்சு! என்ன டாக்டரவர்களே! நீங்கள் கூட ஒரு குழந்தையைப்போல் பேசுகிறீர்களே?" என்றார். இதைக்கேட்டதும் நான் "அல்ல; உண்மையாகவே எனக்குக் கலியாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை" என்று சொல்ல, அவர் "பதினாயிரம் ரூபாய் கொடுத்தால்கூட கலியாணம் செய்துகொள்ள மாட்டீர்களோ?" என்று கேட்டார்.

இக் கேள்விக்குச் சரியான விடையளிக்கத் தெரியாமல் நான் இரண்டொரு நிமிஷம் திகைத்தேன்; பிறகு அவரைப்பார்த்து "ஐயா! நானிதுவரையில் ஒரு பெண்ணையும் காதலிக்கவில்லை. காதலற்ற கலியாணங்கள் பல தற்காலத்தில் நடைபெறுகின்றன. இவ்விதமான காதலற்ற கலியாணத்தைச் செய்துகொள்ள எனக் கிஷ்டமில்லை" என்று சொன்னேன்.

இதைக்கேட்டதும் அம்மனிதர் தன்னைச் சுற்றி யொருமுறை பார்த்து விட்டுப் பிறகு என்னை நோக்கி ஈனக் குரலில் "ஐயா! ஒரே ஒரு மணி நேரத்திற்குமட்டும் நீங்கள் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளச் சம்மதிப்பீர்க ளல்லவா?......பொழுது விடிந்தால் நீங்கள் மறுபடியும் கலியாண மாகாதவரைப்போலவே யிருந்துவிடலாம்!" என்றார்.

அவர் சொல்லுவது எனக்குச் சரியாகவே புலப்படவில்லை; ஆகவே நான் அவரைப் பார்த்து "நீங்கள் என்ன சொல்லுகிறீர்க ளென்றே எனக்குத் தெரியவில்லை. கலியாணம் செய்து கொள்வதில் ஒரு மணி நேரத்திற்குக் கலியாணம் செய்துகொள்வதென்றும் இரண்டுமணி நேரத்திற்குக் கலியாணம் செய்துகொள்வ தென்றும் மணிக் கணக்குக்கூட உண்டா?......சற்று விளங்கும்படிச் சொல்லுங்கள்" என்றேன்.

இதைக்கேட்டதும் அவர் சிறிதுநேரம் மௌனமாயிருந்துவிட்டுப் பிறகு அழுத்தமான குரலில் என்னைப்பார்த்து "நான் சொல்ல வேண்டியதைச் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன், கேளுங்கள். இவ்வீட்டின் மாடியறையில் என்னுடைய மகள் படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். அவளுக்குத் திடீரென்று ஏற்பட்டிருக்கும் வியாதி யின்னதென்று திட்டமாக ஒருவராலும்

---

ஊக்கமுறுதி யாக்கமுடைமை.

சொல்ல முடியவில்லை. சில நாட்களாக இரண்டு கைதேர்ந்த டாக்டர்கள் தங்களா லானவரையில் முயன்று பார்த்தார்கள். அவர்கள் மருந்தில் கொஞ் சங்கூடக் குணம் ஏற்படவில்லை. அவர்கள், தாம் கொடுத்த மருந்து மிகக் கடுமையான தென்றும், எப்பொழுது இந்த மருந்துக்கே சௌக்கியம் ஏற்பட வில்லையோ இனி என் மகள் பிழைப்பது அரிது என்றும் சொல்லி விட்டார் கள். இன்னும் வேறு ஏதாவது மருந்து கொடுத்துப் பாருங்கள் என்று நான் அவர்களைக் கெஞ்சிக்கேட்டேன். என்மகள் மனோ வியாதியினால் பீடிக்கப்பட்டிருக்கிறா ளென்றும் தேக வியாதியானால் தாம் கொடுத்த மருந் துக்குக் கட்டாயம் நன்மையுண்டாயிருக்க வேண்டு மென்றும் சொல்லி விட்டு அவர்கள் இனித் தம்மா லொன்று மாகாதென்பதாகக் கையை விரித்து விட்டார்கள். என் மகள் மனோவியாதியினால் பீடிக்கப்பட்டிருக்கிறா ளென்று அவர்கள் சொன்னதும் எனக்கு உண்மை புலப்பட்டது. அதாவது என் மகள் அசௌக்கிய மடைவதற்கு முன் ஒரு மனிதனைக் காதலித்து வந்தாள். அவன் ஒரு காசுக்குக்கூடப் பிரயோஜ மில்லாதவன்; அவன் நற்குண நல் லொழுக்கம் தெரியாத நாடோடி. என் மகள் அவனையே காதலித்து, அவ னையே கலியாணம் செய்து கொள்ளவேண்டு மென்று எண்ணங்கொண் டாள். அவளுடைய தீராக்காதலே இப்பொழுது அவளுக்கு மரணத்தை யுண்டாக்குகிறது. அவள் முழுமனமும் அவனது காதலிலேயே ஈடுபட்டு விட்டதனால், சில நாட்களாக அவனையே ஸ்மரித்துக்கொண்டு பைத்தியம் பிடித்தவளைப் போலிருந்தாள். நாளுக்கு நாள் அவளுடைய காதல் பைத்தி யம் அதிகரித்துக்கொண்டு வந்தபடியால் அவள் கனவிலும் நனவிலும் அவள் காதலித்தவன் பெயரையே கத்திக்கொண்டும் அவனைப்பற்றிய ஒரே ஞாபகங் கொண்டவளாய்ப் பிதற்றிக்கொண்டும் இருந்தாள். சில நாட்களிப்படித் தானிருக்கு மென்றும், அப்பால் சௌக்கிய மடைந்து விடுவாளென்றும் நான் சாமானியமாக எண்ணிக்கொண் டிருந்துவிட்டேன். கடைசியில் இப் பொழுது அவளது உயிருக்கே மோசம் வந்து விட்டது. அவள் காதலித்த மனிதன் மூர்க்கனாயினும், அவர்களது கலியாணத்திற்கு நான் குறுக்கே நின் றது மன்னிக்கக் கூடாத தப்பிதமென்று இப்பொழுது தான் தெரிகிறது. எப்படி யெனில் ஆரம்பத்திலேயே நான் அவர்களிருவருக்கும் அவர்கள் ஒரு வரை யொருவர் காதலிப்பது கூடாது என்று கோபத்துடன் தடுத்துக் கூறி னேன். அந்தோ! நான் ஏன் அப்படிச் சொன்னேன்! எனக்காகப் பயந்து அந்த மனிதன் என் மகளின் பேரிலுள்ள எண்ணத்தை யொழித்து விட்டு எங்கேயோ போய்விட்டான். ஆனால் இவளோ அவனே ஞாபகமாக இருந்து இப்பொழுது சாகக்கிடக்கிறாள். அவன் தற்சமயம் எங்கேயிருக்கிறா னென்று தெரியவில்லை; தெரிந்தால் அவனை யழைத்து வந்து இருவருக்கும் கலியா ணத்தைச் செய்து வைப்பேன்.........டாக்டரவர்களே! இப்பொழுது உங் களை எதற்காக அழைத்தே னென்றால், நீங்கள் அந்த மனிதனைப்போல் பாவனை செய்துகொண்டு என் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும்" என்றார்.

"என்ன! என்ன!" என்று நான் தாங்கமுடியாத ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"ஆம். இதற்காகவேதான் நான் உங்களை அழைத்துவரச் சொன்னேன். சரியான ஸ்வாதீன மில்லாததனால் உங்களுக்கும் தான் காதலித்த மனிதனுக்

கும் அவளுக்குத் தற்சமயம் வித்தியாசம் தெரியாது. தான் காதலித்த புருஷனையே தான் கலியாணம் செய்துகொண்டு விட்டதாக அவள் எண்ணிக் கொள்வாள். இதனால் சாகுந்தருணத்தில் அவள் மனம் நிம்மதியாயிருக்கும்'' என்று அவர் கூறினார்.

நான் பதில் பேசவேயில்லை. அவருடைய எண்ணம் அதிபயங்கரமாகவே எனக்குத் தோன்றியது.

மறுபடியும் அம்மனிதர் என்னைப்பார்த்து நான் சொல்வது வழக்கமில்லாத வழக்கந்தான். அதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் வேறொன்றும் செய்ய முடியவில்லை. இவ்விதம் உங்களுக்கும் அவளுக்கும் கலியாணத்தை செய்வித்தாவது, சாகுந்தருணத்தில் அவள் மனதுக்குத் திருப்தியை யுண்டாக்கவேண்டு மென்று என் மனம் என்னை நிர்ப்பந்தப் படுத்துகிறது. நான் செய்த தவறினாலேயே என் செல்வப் புத்திரியாகிய மீனாள் மரண மடைகின்றாள். எப்பொழுது அவள் பிழைப்பது முடியாத விஷயமென்று தெரிந்து விட்டதோ, இனி அவளைப் பிழைக்க வைப்பதில் முயற்சி செய்வதைவிட, மரண சமயத்தில் அவள் வேண்டுவதை நாம் கொடுப்பது போல், அவளுடைய அலையும் மனதிற்கு நாம் திருப்தியையும் சந்தோஷத்தையும் கொடுக்க வேண்டியது அத்யாவசியமானது. ஆ! நான் என்ன செய்வேன்! என் செயலினாலேயே என் மகளிறக்கும்படி நான் பூர்வ ஜன்மத்தில் என்ன பாவம் செய்தேனோ தெரியவில்லை! ஐயோ! என் மனம் படும் பாட்டைச் சொல்லி முடியாது......என்று சொல்லிவிட்டுக் கண்ணீருகுத்தார். இந்தச் சமயத்தில் அவருடைய முகத்தை நான் நன்றாக உற்றுப்பார்த்தேன். எனக்குத் தாங்கமுடியாத பரிதாபம் மேலிட்டு விட்டது.........இருந்தாலும் நேயர்களே! அவருடைய இஷ்டம்போல் நான் நடந்துகொள்ள முடியுமா? கலியாணம் என்ற வார்த்தைக்கே அம்மனிதர் மதிப்பு வைத்துப் பேசவில்லை. இப்பேர்ப்பட்ட கலியாணங்களும் உலகத்தில் நடைபெறுகின்றனவோ என்ற ஆச்சரியமும் சந்தேகமும் எனக்குண்டாயின.

இரண்டொரு நிமிஷங் கழித்து நான் மிகப் பரிதாபகரமான நிலைமையிலிருந்த அம்மனிதரைப்பார்த்து "ஐயா! இவ்விஷயத்தில் உங்களுக்கு என்னால் யாதொரு உபகாரமும் செய்ய முடியாதென்று மிகவும் வருத்தப்படுகிறேன்'' என்று சொன்னேன். உண்மையைச் சொல்லுமிடத்து அவரே ஸ்வாதீன மற்றுப் பிதற்றுகின்றாரோ என்று நான் சந்தேகப்பட்டு விட்டேன்.

நான் முடியாதென்பதாகத் தெரிவித்தவுடன் அம்மனிதர் என்னைப் பார்த்து "அப்படியானால் நீங்கள் எனக்கு ஒத்தாசை செய்ய மாட்டீர்களா? மரண காலத்தில் என் மகளின் மனம் நிம்மதியடைய வேண்டுமென்று நான் முயற்சி செய்வதற்கு நீங்கள் உதவி புரிய முடியாதா?'' என்று கேட்டார்.

நான்.—கலியாண மென்பது தெய்வீகமான விஷயம். இவ்விதம் தப்பான காரியம் செய்வதற்கு நான் ஒருகாலும் உடன்படமாட்டேன்—என்று என் மனதை யொருவாறு திடப்படுத்திக்கொண்டு கூறினேன்.

(தொடரும்.)

---

எதிர்மாறுரையாள் பதிமாவிரதை.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

ப்ரஜோற்பத்தி௵ தைமூ—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854,

பசலி 1341, கோல்லமாண்டு 1107, ஹிஜிரி 1350,

இங்கிலீஷ் 1932௵ ஜனவரிமூ—பிப்ரவரிமூ

| தை தேதி | ஜனவரி (1932௵ பிப்ரவரி) | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | சஷ்9-20 | உத்32-45 | சித்60 | மகாரவி நா-6-0, கரிநாள் உத்தாரயண புண்யகாலம், சங்கராந்திபண்டிகை |
| 2 | 15 | வெ | சப்16-3 | ரே40-25 | அமி60 | கரிநாள், மாட்டுப்பொங்கல் |
| 3 | 16 | சனி | அஷ்22-40 | அஸ்47-58 | சித்60 | கரிநாள் |
| 4 | 17 | ஞா | நவ28-35 | பர54-38 | சித்60 | மூலிகை உபயோகிக்க |
| 5 | 18 | திங் | தச33-13 | ✻கி59-53 | மர59-53அ | கிருத்திகை |
| 6 | 19 | செவ் | ஏகா36-18 | ரோ60 | அமி60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 7 | 20 | புத | து37-33 | ரோ3-28 | சித்60 | கூர்ம துவாதசி, சீமந்தம் |
| 8 | 21 | வியா | திர36-58 | மிரு5-18 | மர60 | பிரதோஷம் |
| 9 | 22 | வெ | சது34-50 | திரு5-28 | சித்60 | தான்யம்களஞ்சியம்வைக்க |
| 10 | 23 | சனி | ○31-25 | புன4-13 | சித்60 | பௌர்ணமி, தைப்பூசம் |
| 11 | 24 | ஞா | பிர26-45 | பூச1-48 ஆயி58-30 | சித்60 | |
| 12 | 25 | திங் | துதி21-30 | மக54-38 | ம54-38சித் | |
| 13 | 26 | செவ் | திரி15-50 | பூர50-35 | சி50-35அ | |
| 14 | 27 | புத | சது10-3 | உத்46-30 | அ46-30மர | |
| 15 | 28 | வியா | பஞ்4-10 சஷ்58-40 | அஸ்42-33 | சித்60 | |
| 16 | 29 | வெ | சப்53-28 | சித்39-3 | சித்60 | |
| 17 | 30 | சனி | அஷ்48-40 | சுவா35-50 | அ35-50சி | |
| 18 | 31 | ஞா | நவ44-25 | விசா33-8 | மர60 | |
| 19 | 1 | திங் | தச40-35 | அனு30-55 | சித்60 | |
| 20 | 2 | செவ் | ஏகா37-30 | கே29-23 | மர29-23அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 21 | 3 | புத | து35-13 | மூல28-28 | ம28-28அ | கணிதாரம்பம், கடன் தீக்க |
| 22 | 4 | வியா | திர33-42 | பூரா28-30 | சித்60 | மாச சிவராத்திரி |
| 23 | 5 | வெ | சது33-23 | உத்29-32 | சி29-32மர | வாகனமேற, உழவு செய்ய |
| 24 | 6 | சனி | அ●34-3 | திரு31-45 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 25 | 7 | ஞா | பிர36-18 | அவி35-10 | சி35-10மர | மாகசுத்தம் |
| 26 | 8 | திங் | துதி39-50 | சத39-58 | சி39-58மர | சந்திர தரிசனம், விவாகம் |
| 27 | 9 | செ | திரி44-43 | பூர45-55 | ம45-55அ | ஏற்றம், கபிலை ஸ்தாபிக்க |
| 28 | 10 | புதன் | சது50-30 | உத்52-55 | சி52-55மர | மாச சதுர்த்தி விரதம் |
| 29 | 11 | வியா | பஞ்57-8 | ரே60 | சித்60 | மதன பஞ்சமி, ஸ்ரீ பஞ்சமி |
| 30 | 12 | வெ | சஷ்60 | ரே0-35 | அமி60 | கும்பரவி நா-37-33, திருதினஸ்பிருக் |

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| சுக் / சூ-ச செவ் | 18-மகர-புத 24-மீன-சுக் | | குரு |
| புத | | | கே |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.